*Tenral*

*Malar 2, ital 41*

*March 27, 1956*

Record no. 947

# தென்றல்

ஆசிரியர்:- கண்ணதாசன்.

உள்நாடு (இலங்கை உட்பட) விலை இரண்டணா | வெளிநாடு மூன்றணா | அலுவலகம்: 'தென்றல்' சென்னை-6.

மலர் 2 | சென்னை | 27—3—56 | செவ்வாய்க்கிழமை | இதழ் 41


# உற்பத்திக்கு உற்சாகம்

## எளிய பாடல்கள்!

**கண்ணதாசன்**

உடுக்க உடை, உண்ண உணவு, இருக்க இடம்—இவை வாழ்க்கையின் அத்தியாவசியத் தேவைகள். பிரதி ஒரு மனிதனுக்கும் இன்றியமையாதவை இந்த மூன்றும்தான். சுலபமாக இவற்றைப் பெற்றுவிடக்கூடியவர்களுக்கு, இவற்றின் உற்பத்தியிலே உள்ள கஷ்டங்கள் புரியவராது. பெறமுடியாதவர்களுக்கு, இவற்றின் அருமை பெருமைகள் புரியும். கதிர் விழிக்கு முன்னாலே கண் விழித்து, காட்டிலும் மேட்டிலும் கல்லிலும் முள்ளிலும் நடந்து, கைவலிக்க உழுது, வேர்வை சிந்த நீர்பாய்ச்சி, வெய்யிலில் நின்று அறுத்து தன் தோல் கருத்ததற்குப் பின்னாலே, "கட்டுக் கலங்கண்டது, கதிர் உழக்கு நெற்கண்டது, கொண்டுபோங்கள்," என்று கொடுத்தனுப்புகிற பாட்டாளி, உழைப்பைத் தவிர ஓய்வைக் கண்டவனல்ல. உல்லாச வாழ்வு என்ன என்பது அவனுக்குத் தெரியாது. பக்க வாத்தியங்களோடு செய்யப்படுகிற கச்சேரி, அவன் பார்த்தோ கேட்டோ அறியாத ஒன்று. அழகிகளின் ஆடல் அவனுக்கு அதிசயமான கற்பனை. கிராமபோனையோ, வானொலியையோ, முடுக்கிக் காட்டினால், உள்ளே இருந்துகொண்டு ஆட்கள் பாடுகிறார்களோ என்று எண்ணி, பெட்டியைத் திறந்து பார்க்க ஆசைப்படுவான். சுருங்கச் சொன்னால், பரபரப்பான நாகரீகத்தின் நவீன வசதிகள் அவனது வாழ்க்கை எல்லைக்கு அப்பால் வெகு தூரத்திலுள்ளவை. அவன் காணக்கூடியது கிராமத்துப் பெண்களின் கும்மி; அவன் கேட்கக்கூடியது கட்டுப்பாடான ராகதாளங்களை லட்சியம் செய்யாத நாட்டுப்பாடல்.

"எத்தனை கட்டை சுதி? சாரீரத்திலே உள்ள கனம் என்ன, பிடிப்பு என்ன? சங்கதிகள் ஏன் அப்படி இருக்கின்றன, இப்படி இருக்கின்றன?" என்கிற கேள்விகளையெல்லாம் கடந்து, களங்கமற்ற இதயத்தின் அடித்தளத்திலே இருந்து புறப்படுகிற சிக்கலில்லாத உணர்ச்சி ஒன்றையே மூலாதாரமாகக் கொண்டு, கண்ணுக்கு முன்னால் காண்பதையும், காதால் கேட்டுப் பழகியதையும் அன்பு வழியிலே அனுபவித்து அறிந்ததையும் உறவு பாராட்டுவதால் எழும் உணர்ச்சியையும் தனக்கு மிகவும் பழக்கமான வார்த்தைகளிலே வடித்து வடித்துக் கொட்டுவதும், கொட்டப்படுவதைக் கேட்பதும்தான் உழைப்பாளிக்குள்ள உற்சாகம். அதுதான் உற்பத்திக்கும் உற்சாகம்.

இயற்கையோடு கலந்து விளைந்து வருகிறது அவனது இசை. வயலில் இறங்கி உழுபவனுக்குமட்டுமல்ல, மலைபிளந்து கல்லெடுப்பவன், கேணி, குளம் வெட்டுபவன், எனப் பலவகைப்பட்ட தொழிலாளர்கள் அத்தனைபேருக்கும் இந்த எளிய பாடல்கள்தான் உற்சாகம் தருகின்றன. நாகரீகத்தில் ஊறிய மனிதன் கூட அதைக் கேட்கும் வாய்ப்புப் பெற்றால் நெஞ்சைப் பறிகொடுத்து விடுவது நிகழக்கூடியதே. இதைத்தான் பாரதி சொன்னான்!

"ஏற்ற நீர்ப்பாட்டின்
இசையினிலும் நெல் இடிக்கும்
கோற்றொடியார் குக்குவெனக்
கொஞ்சும் ஒலியினிலும்
சுண்ணம் இடிப்பார் தம்
சுவைமிகுந்த பண்களிலும்
பண்ணை மடவார்-
பழகுபல பாட்டினிலும்
வட்டமிட்டுப் பெண்கள்
வளைக்கரங்கள் தாம் ஒலிக்க
கொட்டி இசைத்திடுமோர்
கூட்டமுதப் பாட்டினிலும்
நெஞ்சைப்
பறிகொடுத்தேன் பாவியேன்"

—என்று

ஆழமான கிணறு; அதிலிருந்து நீரை அள்ளி இரைக்கும் ஏற்றம்; ஏற்றத்துக் கழியிலே இரண்டு பேர்; சர்க்கஸ் பழகுவதற்கு நிற்பதுபோல் நிற்கிறார்கள். அந்தக் கழியிலேயே முன்னும் பின்னும் நடக்கிறார்கள். முன்னால் போகும்போது தண்ணீரை அள்ளுகிறது; பின்னால் வரும்போது அள்ளிய தண்ணீரை வடிகாலில் ஊற்றுகிறது. இது அந்தக் கிராம இயந்திரங்கள் இயங்கும் முறை. இப்படியே வெகுநேரம் நடக்க வேண்டியிருக்கிறது. வாயை மூடிக்கொண்டு நடந்தால் களைப்புத் தோன்றுகிறது. களைப்புத் தெரியாமல் இருக்கப் பாட்டு; அந்தப் பாட்டிலும் அனுபவப்பட்ட கற்பனை; அபாரக் கற்பனை; காதல் காதலாகவே சொட்டும் கற்பனை; பாசம், பாசமாகவே மலரும் கற்பனை; ஏற்றத்தில் நடப்பவர்களில் ஒருவனுக்கு உறவுமுறைக்காரி ஒருத்தி; தூரத்திலே வந்து கொண்டிருக்கிறாள். சேலைத் தலைப்பையே மேலாடையாகக் கொண்டு கோடாலிக் கொண்டையிட்டுக் கூந்தலை அழகு செய்து, நெற்றியிலோர் குங்குமப் பொட்டு வைத்து, காதிலே வளையங்கள் தொங்க, கைகளிலே கண்ணாடி வளையல்கள் மின்ன, கையணைவில் கலயம் தாங்கி, தாங்காத மறு கையை நோகாமல் வீசி, முன் குத்தும்போது சிரித்தும், கல் குத்தும்போது களித்தும் ஒய்யார வண்ணமயில் ஓசையின்றி நடப்பதுபோல் செய்யில் முளைத்தெழுந்த அந்த செங்கரும்பு நடக்கின்றாள்.

காணுகின்றான் காதலன்; கண்ணாரப் பருகுகின்றான்; தோள்களுக்குத் தெம்பு; கைகளுக்குப் புது உரம். சலித்திருந்த உள்ளத்தில் முளைத்தெழுகிறது உணர்ச்சி. படபடவென முன்னும் பின்னும் நடக்கிறான். ஏற்றம், வேகவேகமாகத் தண்ணீரை இரைத்துக் கொட்டுகிறது, அவனது இருதய உணர்ச்சியை பிரதிபலிப்பது போல். பேரிட்டு அழைக்கிறான்; அவள் பேசவில்லை. கோபமா? அதுவுமில்லை. ஊடலா? இருக்கலாம். ஆனால் அந்த வார்த்தை அவளுக்குத் தெரியாது. வர்ண ஜால ஆடம்பர நாகரீகத்தின் வரம்பைக்கூடத் தொட்டறியாத அந்த இயற்கை அழகு, மச்சானைப் பார்த்தும், மறுகணத்தில் நிலம் பார்த்தும், "அச்சாரம் இது மச்சான்! அடுத்த கதை எப்போது? மிச்சமுள்ள காலம் மிகவும் குறுகியது. பச்சை இலை போனால் பழுப்பு இலை தோன்றிவிடும். கைச்சரக்குப் போனால் கடைச் சரக்குப் பலிக்காது. சிலைக்கு விலை இல்லை. விலை சொன்னால் வழியில்லை. அப்பாவைப் பார்த்து, "பரிசம் போடலாமா? ஏ மாமா, பாக்கு வெற்றிலை மாற்றலாமா?" என்று கேட்பதை விட்டு, போகும்போதும் வரும்போதும் பார்ப்பதிலே என்ன லாபம்?" என்று கேட்கவில்லை —அவள் நின்ற நிலையில் நினைப்பு இது. அவளிடமே பேசி முடித்துவிட விரும்புகிறான் காதலன். ஆனால் ஏற்றத்தை விட்டு இறங்க முடியாது. இறங்கினால் அந்த இடைக்காலத்தில் வேலை தடைப்படும். ஆகவே பாட்டு உருவத்தில் ஒரு கேள்வியைத் தொடுக்கிறான்.

—11-ம் பக்கம்—

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113,

Best copy available.

# ★ கடவுள் வேடம் கலைகிறது! ★

கம்பராமாயணப் பாடல்களைப் பின்னணியாகக் கொண்டு பின்னப்பட்ட நிகழ்ச்சிக் கோர்வை இது. அவமானத்திற்கு—ஆமாம், அவன் மானத்திற்கு ராமனின் தலை பலியானது. பலப்பல கோதைகளும் ராமன்களும்—கம்பராமாயணப் பாடல்களில் 'காதலா'டுகின்றனர்! ஆனால், கோதையரின் கணவன்கள் மானம் காக்கின்றனரா என்பது புலனாகவில்லை! 'அவ(ன்)மானம்' என்ற உணர்ச்சியை உருவகம் செய்தது இந்தக் கட்டுரை. மற்றவை எல்லாம் கம்பராமாயணப் பாடல்களில் தெளியும் நிகழ்ச்சிகளின் படப்பிடிப்புத்தான்.

[ ஆ-ர். ]

வானத்து மதியின் மேனியை மேகக் கூட்டம் மூடியது. காலை ஒளியின் குழந்தைச் சிரிப்பிலேவிண் மீன்களின் புன்னகை மறைந்து கொண்டது. சிலு சிலு என்ற குளு குளுப்பான காற்றின் மென்மை ஆனந்தக் களிப்பை யூட்டியது. கதிரவனின் பிரசவத்திற்கு முன்னே இந்த நிகழ்ச்சிகள் எங்கும் காட்சியாகின.

செம்பஞ்சால் ஆன பூம்படுக்கை. அந்த அமளியிலே அழகணங்கொருத்தி அளகம் அவிழ்ந்துகிடக்க துகில் நெகிழ்ந்து கிடக்க துயில் கொண்டிருந்தாள். இன்பக் கனவின் துடிப்பெல்லாம், துயிலும் அத்துடியிடையாளின் சந்திரவதனத்தில் சுழன்றது. அழகெல்லாம் அந்த மேனியிலே மலர்ந்து கிடந்தது.

அதுபோது...? அரிவாள் மீசையும், தழல்விடும் கண்களும், மிருக பலம் கொண்ட தேகமும் உடைய ஒருவன்-செம்பஞ்சு மெத்தையை அணுகினான். அவனின் முரட்டுக் கரங்கள் மென்மையான மலர் மங்கையின் முகத்தை வருடின. எரி கண்கள் எழில்பொங்கும் ஏந்திழையை எடுத்து விழுங்கின. அவன் அவளை எழுப்பினான், இரவெல்லாம் இன்பத்தில் விழுந்து புரண்டஅந்த சேல்விழியாள்-சுகந்த மயக்கம் கலையாமல் சோகுசாக தூங்கிக் கொண்டிருந்தாள்.

"ஏய், கோதை! எந்நேரம் தூங்கறது? எழுந்திரு...!" அவன் செல்லக் கண்டிப்போடு எழுப்பினான்.

"சும்மாயிரு ராமா! எப்போதும் உனக்கு இந்த சேஷ்டைதான்! கொஞ்ச நேரமும்...!" கனவு வெறியிலோ, நினைவு கடந்த மயக்கத்திலோ அவள் அப்படிப் பேசினாள்.

'கட்டிய கணவன் கல்லாட்டம் நானிருக்கிறேன். இவள் யார் பெயரையோ சொல்கிறாளே! சிருங்கார சேஷ்டைகளைப்பற்றி பிரஸ்தாபிக்கிறாளே!'-அவன் மனக்குரல் இப்படி அலறியது. எங்கிருந்தோ சேவல் ஒன்று அவன் குரலை எதிரொலிப்பதைப் போன்று கூவியது. அவன் தடதடவென்று அறையை விட்டு வெளியே வந்தான். வேலைக்காரி வீடெல்லாம் சுத்தம் செய்து கொண்டிருந்தாள். எஜமானரின் வரவு கண்டு வளைந்து நின்றாள்.

"நான் வெளியூர் செல்கிறேன். வருவதற்கு இரண்டு நாட்களாகும். அம்மாவிடம் சொல்லிவிடு!" என்று சொல்லிக்கொண்டே வெளியேறினான்.

காலைக் கதிரவனின் இளங்கதிர்கள் இளஞ் சிவப்புடன் எங்கும் சிதறின. ஒளியின்பம் உருவம் தெரியாமல் எங்கும் திரியலானது. திறந்துவிடப்பட்டிருந்த சாளரங்கள் வழியாக சூடேறிய கதிர்கள் படுக்கையறையினுள் பரவியிருந்தன. கோதையின் முகத்தில் இளஞ் சூட்டோடு கதிரொளி விழுந்தது. முகத்தைத் திருப்பி மலர்மேனியை புரட்டிப் படுத்தாள். கதிரொளி அப்பொழுதும் விடுவதாகக் காணோம். அவள் மேனி முழுவதும் தழுவியது.

முதலில் கதகதப்பாயிருந்தது. நேரமாக ஆக கதகதப்பு - கடுஞ் சூட்டை யேற்றியது. அவள் நினைவுகள் மிருதுவாக மலர்ந்தன. துயில் மடிந்து விழிப்புப் பிறந்தது. சோம்பல் முறித்துக் கோண்டு - உடலை வளைத்து நெளித்து மின்னற் கொடி போன்று எழுந்து உட்கார்ந்தாள்! வேலைக்காரி அறையை சுத்தம் செய்ய வந்து சேர்ந்தாள்.

"ஏண்டி ஐயா எழுந்திட்டாரா?" என்றாள் கோதை.

"ஐயா வெளியே போயி ஐந்து நாழிகையாகிறது, அம்மா!" என்றாள் வேலைக்காரி.

"வெளியே போய் அவ்வளவு நேரமாகிறதா? எங்கு போகிறேன் என்று சொல்லிப் போனாரா?" என்றாள் கோதை.

"எங்கேயோ வெளியூர் போகிறாராம், வர இன்னும் இரண்டுநாளாகுமாம் - உங்களிடம் சொல்லிடச் சொன்னாரு...!" என்றாள் வேலைக்காரி.

"எந்த ஊருக்குப் போகிறார் என்று தெரியவில்லையே! ஏன் என்னை எழுப்பவில்லை?" என்றாள் கோதை.

"உங்கள் தூக்கத்தைக் கெடுக்கக்கூடாது என்றுதான் எழுப்பாமல் சென்றுவிட்டாரம்மா...!" என்றாள் வேலைக்காரி.

"சரி, உன் வேலையைக் கவனி!" என்று வேலைக்காரிக்கு உத்தரவு போட்டுவிட்டு, படுக்கையை விட்டு எழுந்து நடந்தாள். அவள் நடையிலேயிருந்த நளினம்...! அவள் முகத்திலேயிருந்த இன்பச் சிரிப்பின் பனித்திரை! இதழ்களிலே தளும்பும் செந்தேன்! எழிலின் புகழாகத் தோன்றிய கோதை-கால வேகத்தோடு மனவேகத்தை ஓட விட்டாள்!

# அயோத்தி நகரில் நடந்த அந்தரங்கக் காதல்!

## இரவு

இரவுப் பெண்ணின் நீண்ட அங்கியினுள் உலகம் சுருண்டுகோண்டது. கோதையும் ராமனும் கை கோர்த்துக்கொண்டு உல்லாச விடுதியினுள் புகுந்தனர்.

ஒருவள் கைவளையைக் கழட்டி வைத்தாள். மற்றொருவள் காதணியைக் கழட்டினாள். இரத்தின ஆரங்களை இன்னொருத்தி பந்தயமென்றாள். விலையுயர்ந்த உத்தரியத்தை ஒரு உத்தமி பந்தயமாக்கினாள்.

கையில் மீட்டியிருந்த மகரயாழை ஒரு மோகனங்கி பந்தயப் பொருளென்றாள். மேற் காணும் வகையில் சூதாடும் வட்டிலில் வனிதையர் குழாம் வார்த்தையாடி சூதாடியது. இவைகளைக் கண்டவாறே கோதையும் ராமனும் மறுபக்கம் திரும்பினர்.

அழகும் ஆடம்பரமும் மிக்க அணங்கொருத்தி ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருந்தாள். கரிய கூந்தல் அவிழ்ந்து கிடந்தது. கலை, கலைந்து கிடந்தது. கண்கள் சிவந்து. எரிந்து கொண்டிருந்தன. அதரங்களில் மது தளும்பிக் கொண்டிருந்தது. கையிலிருந்த கிண்ணத்தை வெறித்து நோக்கினாள். தானே வாய் பேசலானாள். அவள் பேச்சு கோதையையும் ராமனையும் கவர்ந்தது.

"பித்தம் பிடித்தவளே! அடி கள்ளி! உனக்கு ஏனடி இந்த நாசகால புத்தி! மதுவென்றால் மதியும் மயங்கிப் போமோ? நான் ஊற்றி வைத்துள்ள மதுவை ஏனடி குடிக்கத் துடிக்கிறாய்? பீப்பாய் நிறைய போதை யேற்றும் கள்ளிருக்கிறதே! அதைக் குடிக்காமல் இங்கு வந்து ஏனடி சண்டித்தனம் செய்கிறாய்? போடி பைத்தியக்காரி...!" என்று முல்லைப் பற்களெல்லாம் மின்னலிடும்படி சிரித்தாள். அவளின் மது மயக்கத்தையும் வெறிப் பேச்சையும் கண்டு கோதையும் ராமனும் சிரித்தனர். சிரிப்பொலி கேட்ட அச்சிங்காரி சீறும் பார்வையால் அவர்களைப் பார்த்தாள். அவர்களோ ஆளுக்கொரு மதுக் கிண்ணங்களோடு காட்சியளித்தனர். "இவர்களும் நம்ம குழாம்தானா?" என்று மது பருகலானாள் மது மங்கை.

மதுவின் போதை கோதையை நிலை கலங்கச் செய்தது. ராமனின் வெறி உச்சிக் கட்டத்தில் சிரித்தது. இருவரும் தம் நிலை மறந்தனர். தனியிடம் நாடினர். தமது விருப்பப்படி இன்பம் துய்த்தனர். இரவின் மெல்லிய அணைப்பிலே உலகம் துவண்டு கிடந்தது. ராமனின் அணைப்பிலே கோதை சுருண்டு கிடந்தாள். கங்குல் அகன்றது ராமனும் கோதையும் வீடு நோக்கி நடந்தனர்.

## 'மேலாடை'

இரண்டு நாட்கள் ஓடி ஒளிந்து கொண்டன. கோதையின் கணவன் ஊரிலிருந்து திரும்பிவிட்டான். கோதைக்கு அவன் வரவு மிகுந்த கவலையையே அளித்தது. காதலன் ராமனைச் சந்திக்க முடியாதே என்ற ஏக்கம் அவள் இதயத்தைச் சுட்டெரித்தது. அவள் கணவனுக்கோ கோதைமேல் பலமான சந்தேகம் விழுந்திருந்தது. வேலைக்காரியை விசாரித்தான். அவளோ, "யாரோ ஒருவன் வருகிறான், போகிறான்" என்றுமட்டுமே சொன்னாள். இன்னான் என்று குறிப்பிட அவளால் முடியவில்லை. சந்தேகம் நிவர்த்தியாகவில்லையே என்று அவன் குழம்பினான். 'அவன் யார்? தூக்க மயக்கத்தில் 'ராமா' என்றாளே, அந்த போடிப் பயல் யார்?' என்று திணறினான், எப்படியும் இதற்கு ஒரு முடிவு கட்டுவதென்று தீர்மானித்தான்.

அது முதல் கோதையை வெளியே எங்கும் செல்லக் கூடாது என்று தடை செய்தான். வீட்டிற்கு யார் வந்தாலும் அனுமதிக்கக் கூடாது என்று வேலைக்காரியை எச்சரித்திருந்தான். கோதைக்கு விஷயம் விளங்கிவிட்டது. தன் கணவன் தன்மேல்தீவிரமாகக்கவனம் சேலுத்துகிறான் என்பதை தெரிந்துகொண்டாள். 'ராமன் இன்று வந்துவிட்டால் என்ன செய்வது?' என்று தவித்தாள். அவள் பரிதவிப்பு வீண் போகவில்லை.

ராமன் ஏகதாளமாக வந்தேவிட்டான். வேலைக்காரி அவனை உள்ளே விட மறுத்தாள். அவனே கேட்பதாக இல்லை: அந்த சமயத்தில் எங்கிருந்தோ கோதையின் கணவன் அங்கு வந்துவிட்டான். ராமனுக்கு சப்த நாடிகளும் ஜன்னிபிடித்து பிதற்றுவதாக தோற்றியது. சிந்தை பந்தம் தெரியாமல் சுழன்றது. கோதைக்கு நிலையே தவறிவிட்டது. 'ராமனுக்கு என்ன ஏற்படப் போகிறதோ' என்ற கிலி அவளை பலி கொண்டது.

"டேய்! நீ யார்? உன் பெயர் என்ன?" - அவனுடைய குரலில் கொடூரம் திமிரியது ராமன் அக்கேள்விகளைக் காதால் கேட்டதுமே நடுநடுங்கிப் போனான்.

"நான்...இ...ந்த ஊர்தா...ன்! என் பேரு கிருஷ்ண...ன்!" என்று தடுமாறிக் கொண்டே பதில் சொன்னான் ராமன்.

"உனக்கு இங்கு என்ன வேலை?" என்றான் கோதையின் கணவன்.

"வந்து...அம்மா இந்த மெல்லிய மேலாடையைக் கேட்டாங்க! கொடுத்துட்டுப் போலாம்னு வந்தேன்...!" என்று உத்தரியத்தை காட்டியபடி பேசினான். இப்பொழுது அவன் பேச்சில் பயமில்லை, கோதைக்கு இப்போதுதான் தைரியம் வந்தது.

"அம்மாங்களுக்கெல்லாம் மேலாடை தருவதுதான் உன் வேலையா? டேய் கிருஷ்ணா! உண்மையைச் சொல்! இல்லையென்றால் உடம்புத் தோல் உரிந்துவிடும்...!" அவன் சாட்டையால் அடிப்பதைப் போன்று அதட்டினான்.

"நீங்க தவறாக எடுத்துக்கோண்டீர்கள். நேற்று அம்மா அங்காடி வீதிக்கு வந்திருந்தார்கள். துகில் கடையில் இந்த ஆடையைப்பார்த்து இன்று எடுத்துவரச் சொன்னார்கள். அதனால் எடுத்து வந்தேன். வேண்டாம் என்றால்எடுத்துச் செல்கிறேன் எனக்கு ஆட்சேபணையில்லை!" என்றான் ராமன் அலட்சியமாக.

"உண்மையில் நீ உத்தரியம் விற்கத்தான் வந்தாயா?" என்று வீட்டினுள் பார்த்து, 'கோதை! கோதை!' என்று குரல் கொடுத்தான். கோதை வெளியே வந்தாள். "கோதை இந்த உத்தரியத்தை நீயா கேட்டாய்?" என்றான்.

"ஆமாங்க! கடைக்காரரிடம் சொல்லி வந்தேன். இந்த ஆளிடம் கொடுத்தனுப்பி யிருக்கிறார்கள். நீங்க இல்லாமே எதையும் வாங்கக் கூடாது என்றே இன்று எடுத்து வரச் சொன்னேன்!" என்றாள் கோதை.

"அப்படியானால் சரி! கொடுத்திட்டு போப்பா...! ஆமாம், இதுக்கு என்ன விலை?" என்று வினவினான்.

"விலை தானுங்களே! பன்னிரண்டு காசுங்க...!" என்றான் ராமன்.

பணத்தை எண்ணி ராமனிடம் கொடுத்தான் கோதையின் கணவன். கோதையின் புன்முறுவல் ராமனைத் தழுவியது. ராமனின் வெற்றிச் சிரிப்பு கோதையைக்

— 10-ம் பக்கம் —



"போற்றுபவர் போற்றட்டும் புழுதி வாரித்
தூற்றுபவர் தூற்றட்டும்; தோடர்ந்து செல்வேன்
ஏற்றதோரு கருத்தை என(து) உள்ளம் என்றால்
எடுத்துரைப்பேன் எவர்வரினும் நில்லேன்; அஞ்சேன்!"

# எண்ணம்

மலர் 2 | 27-3-56 | இதழ் 41

## நேரு

"இந்தியத் துணைக்கண்டத்தின் தென்பகுதி இப்படி விழிப்புறும் என்று தெரிந்தால் நான் சரித்திரமே எழுதியிருக்கமாட்டேன். காந்தியைக் காட்டியே காலத்தை ஓட்டிவிடலாமென்று எண்ணினேன். ஆனால் நான் எழுதிய சரித்திரமே என்னைப் பாய்கிறது. வெள்ளையரை விரட்டுவதற்கு கச்சைகட்டி முன்வந்த தமிழர்களா இன விடுதலை கோருகிறார்கள் என்று என்னால் நினைத்துக்கூடப் பார்க்கமுடியவில்லை! அதனால்தான், 'காந்தி நமது தேச பிதா, நாமெல்லாம் இந்தியர்கள்' என்று சொல்லிப் பார்த்தேன், ஆனால் அவர்களோ 'திராவிடம் திராவிடம்' என்று கர்ஜிக்கிறார்கள். அவர்கள் கேட்பது அநீதி என்று சொல்லவில்லை. உலகத்தில் எத்தனையோ நாடுகள் இனவிடுதலை பெற்று இயங்கி வருகின்றன! ஆனால் என் காலத்தில் இந்தியாவின் தென்பகுதி பிரிவதை என் மனம் ஒப்பவில்லை. உலகிலே எனக்குள்ள கௌரவத்தை வாழ்வின் கடைசிக் காலத்திலேயா அழித்துக் கொள்வது! எனக்குப் பிற்காலத்தில் ஒவ்வொரு நகரமும் தனித் தனி ஆட்சி வேண்டுமானாலும் நடத்திக்கொள்ளட்டுமே! நான் துடித்துக் கொண்டிருப்பதெல்லாம் இந்த ஒரு காரியத்திற்காகத்தான். ஜவகரின் காலத்திலே டில்லியிலேயுள்ள சங்கிலி முடிச்சு அவிழ்க்கப் பட்டுவிடக்கூடாது. இதற்காகத்தான் கட்சியின் பேராலேயே காங்கிரஸ் காரர்களையும் அடக்கிக் கொண்டு வருகிறேன். அப்படிப்பட்ட கட்டுப்பாடு இல்லாவிட்டால் சென்னை சட்டசபை என்ன கதியாகும் தெரியுமா? கல்யாணி காங்கிரசிலிருந்தே அவர்களின் மூக்குக்கயிறு என் கையிலே தானிருக்கிறது. மொழிவழி மாநிலம் பற்றி எந்தக் காங்கிரஸ்காரரும் பேசக்கூடாதென்று கட்டளை பிறப்பித்தேன். இப்போதும் ஒரு புதிய கட்டளை பிறப்பிக்கப் பட்டிருக்கிறது. அதன்படி ராஜ்ய புனரமைப்பு பற்றி உறுப்பினர்களுக்குக் கருத்தைத் தெரிவிக்க உரிமை உண்டு; ஆனால் எதிர்த்து ஓட்டுப் போடக்கூடாது. இதுவிசித்திரமான உத்தரவாகத் தெரிகிறதல்லவா! மனச்சான்றைச் கொல்லச் சொல்வது போலிருக்கிறதல்லவா! எல்லாம், நான், கண்களை மூடும்வரை தென்னாடு துண்டிக்கப்படக்கூடாது என்பதற்காகத்தான். எனக்குப் பிறகு யார் எப்படிப் போனால் என்ன? என் பெயர் பொன் எழுத்துக்களில் மின்னும். அதுபோதும் எனக்கு"

## காமராசர்

"நான் யாருடைய உதவி கிடைக்கும் என்று துணிந்து பதவியேற்றேனோ அவர்களே என்னை பலமாக எதிர்க்கிறார்கள், அவர்கள் தான் இன்று எதிர்க்கட்சியாகவும் இயங்குகிறார்கள், என்னுடைய கவுரவத்தை விட்டுக்கொடுக்கக் கூடாது என்பதற்காக மிரட்டிப் பார்த்தால் அதுவும் அவர்களிடம் பலிக்கவில்லை, நேருவே இவர்கள் பெயரைக் கேட்டால சற்று தயங்கி விடுகிறார். நான் டில்லிக்குப் போய் விட்டால் முதலில் திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பற்றித்தான் விசாரிக்கிறார். அவ்வளவு திகில் அவருக்கு! இவர்களால்தான் என்க்கு டில்லியிலே முக்கியத்துவம் கிடைக்கிறதே தவிர, என் சொந்தத் திறமைக்காக அல்ல! இதற்காகத்தான் இவர்களை அணைத்தேன்: வலிய சென்று பார்த்தேன், ஆனால் அவர்களே இப்போது என்னை பலமாக எதிர்க்கிறார்கள். இதுதான் எனக்குப் பெருங்கவலையாக இருக்கிறது. கவலையைக் காட்டிக்கொள்ளக் கூடாதென்பதற்காக கொஞ்சம் பிகுவோடு பேசிப் பார்த்தேன் லயோலா கல்லூரியில். அந்தப் பேச்சு இவ்வளவு பெரிய வினைக்கு வித்தூண்டுமென்று தெரிந்தால் நான் அந்தக் கல்லூரிக்கே போயிருக்கமாட்டேன், எனக்கெதற்கு கல்லூரிகளெல்லாம்? ஊமையாக இருந்தே உலகை ஏமாற்றிவிட முடியுமே!

தட்சிணப் பிரதேசத்தைப் பற்றி நான் ஒன்றும் இதுவரை பேசவில்லை என்கிறார்கள் பலர். உண்மைதான். பேசினால் என்ன ஆகும் என்பது எனக்குத் தெரியும். ஆனால் ராஜாஜி இதை வலியுறுத்திக்கொண்டிருப்பதுதான் எனக்குப் பிடிக்கவில்லை, சத்தியமூர்த்தி காலத்திலிருந்[illegible] எனக்கு எதிராகச் சல்லடங் கட்டிவருகிறார். என்ன முடிவுக்கோ இதெல்லாம்! எது எப்படிப் போனாலும் என்னைப் பொறுத்தவரையில் இனி 'பாம்புக்குத் தலையும் மீனுக்கு வாலும்' என்கிற நிலை நீடிக்காது என்பது மட்டும் எனக்குத் தெரிகிறது, ஏனென்றால் தென்னாட்டில் அண்ணாதுரை கட்சியையே பகைத்துக்கொண்டேன்."

## நீதி மந்திரி

"என் பெயர் சுப்ரமணியம். ஆனால் என் குணவிசேடம் எனக்கு எப்படியோ பல பட்டப் பெயர்களைச் சம்பாதித்துக் கொடுத்திருக்கின்றது. அதையெல்லாம் இலட்சியம் செய்வதே கிடையாது. ஏனென்றால் எனது அரசியல்குரு ராஜாஜிக்குக் கிடைத்ததில் நாலில் ஒரு பங்கு தானே எனக்குக் கிடைத்திருக்கிறது. பிறகு ஏன் நான் கவலைப்பட வேண்டும்? தட்சிணப் பிரதேசம் அமைந்தாலும் என் ஸ்தானம் எனக்கு எப்போதும் உண்டு என்ற தைரியத்தில்தான் நான் அதை ஆதரித்துக் கொண்டிருக்கிறேன். ராஜாஜியும் எனக்கு உதவியளிப்பதாக உறுதியளித்திருக்கிறார். அமிர்தசாஸிலே நேரு வேறு என்னைத் தட்டிக்கொடுத்திருக்கிறார். இதற்குமேல் எனக்கு என்ன வேண்டும். முதல் மந்திரி என்ற பட்டயம் போட்டுக்கொள்ளவில்லையே தவிர, எல்லாக் காரியங்களையும் நான்தான் பார்க்கிறேன். அதனால்தான் தட்சிணப் பிரதேசத்தை இவ்வளவு துணிவோடு ஆதரிக்கிறேன். ஆனால் தட்சிணப் பிரதேசம் அமைந்தால் என்னென்ன கெடுதி உண்டாகும் என்று தி. மு. க.வினர் சொல்வது நூற்றுக்கு நூறு உண்மை. இருந்தால் என்ன? இந்த நேரத்தில் தான் காமராசரின் கருத்துக்கு மாறுபட்டவன் என்று காட்டிக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை என் நிலையை உயர்த்திக் கொள்வதற்கு. மேலும் நேருஜீ அவர்கள், "தென்னாட்டின் போக்கு பயங்கரமாக இருக்கிறது; அதனால் தான்மண்டல யோசனை, தட்சிணப் பிரதேசம் என்று குழப்பினேன்" என்று சொன்னார் என்னிடம். நான் மீற முடியுமா? எனக்கு எது வந்தாலும் அதைத் தீர்த்து வைப்பது ராஜாஜி பொறுப்பு, நேருஜி பொறுப்பு என்ற தைரியத்தில்தான் தி. மு. கவையே தாக்க முனைந்திருக்கிறேன் அவர்கள் தக்க மறுப்புரைப்பார்கள் என்று தெரிந்தும்."

வேலூர் தோட்டப்பாளையம்
தி. மு. க. பொதுக்கூட்டம்
25-3-56 மாலை 6 மணிக்கு
தோட்டப்பாளையம் எட்டியம்மன் கோவில் வீதியில்
தலைவர்:
இரா. புகழேந்தி
சொற்பொழிவாளர்கள்:
அருண்மொழி
எஸ். எஸ். தென்னரசு
வலையாபதி முத்துக்கிருஷ்ணன்

## அரசியல்

★ மார்ச் 15: தாயகமான கிரீஸுடன் ஸைப்ரஸ் தீவை இணைக்கக் கோரியும் பிரிட்டன் பிடியிலிருந்து விடுதலை பெற விரும்பியும் ஸைப்ரஸ் விடுதலை வீரர்கள் பிரிட்டனை எதிர்த்து கிளர்ச்சி செய்து வருகின்றனர்.

★ ராஜாஜி-காமராஜ் ஊடாய் மறுபடியும் நடைபெறும் என்பதற்கு அறிகுறியாக முன்னாள் முதன் மந்திரி ராஜாஜியை இந்நாள் முதன்மந்திரி காமராஜர் தாக்கிப் பேசியுள்ளார்.

★ மார்ச் 16: இந்திய உபகண்டம் இனி 15 மாநிலங்களாகவும் 7 மத்திய ஆட்சிப் பிரதேசங்களாகவும், இவை 5 மண்டலங்களுக்குள் அடங்கியதாகவும் அமைக்கப்படும் எனக் கூறும் மாநில புனரமைப்பு மசோதாவின் பிரதிகள் டில்லிப் பாராளு மன்றத்தில் கொண்டுவரப் பட்டன.

★ அரசாங்கத்துக்கு தட்சணப் பிரதேசம் பற்றிய அபிப்பிராயம் எதுவும் தற்சமயம் இடையாது என மந்திரி சுப்பிரமணியம் கூறினார்.

★ மார்ச் 17: ரிக்ஷாக்களை படிப்படியாக ஒழிக்க ஒரு திட்டம் வகுக்கும்படி மாநில அரசாங்கத்துக்கு மத்திய அரசாங்கம் அறிவித்துள்ளது.

★ தங்களது கோரிக்கை பற்றி நிர்வாகிகள் மௌனம் சாதிப்பதைக் கண்டிக்கும் முறையில் 1000 ஆசிரியர்கள் இந்தூரில் ஒருநாள் உண்ணாவிரதத்தை மேற்கொண்டனர்.

★ சர்க்கார் மருத்துவமனை தொழிலாளர் கூட்டத்தில் சர்க்கார் செய்ய வேண்டிய கடமைகள் குறித்து தி. மு. க. பொதுச்செயலாளர் பேசினார்.

★ மார்ச் 18: மாநில புனரமைப்பு மசோதா பற்றிய கருத்துக்களைச் சொல்லலாம். ஆனால் காங்கிரஸ் ஆட்சியாளரின் தீர்ப்புக்கு எதிராக எவரும் வோட் செய்யக்கூடாது என காங்கிரஸ் கட்சி உறுப்பினர்களுக்கு மேலிடம் உத்தரவிட்டுள்ளது.

★ பெயர்போன 'ஜீப்கார் ஊழல்' பற்றிய விவரம் டில்லிப் பாராளு மன்றத்தில் அம்பலமாகியது. 1007 ஜீப் கார்களுக்கு ஆர்டர் கொடுத்து 50 கார்கள் மட்டுமே பெற்று, மீதமான கார்கள் பெருமல் டில்லி ஏமாந்துள்ளது.

★ மார்ச் 19: சொந்த நாட்டில் வாழ வழிவகைகளைக் காட்டாது தென்னகத்து மக்களை அந்தமானுக்கு அனுப்பிவைக்க சென்னை சர்க்கார் அறிக்கை வெளியிட்டுள்ளது. இதன்படி சர்க்கார் உதவியோடு 60 விவசாய குடும்பங்கள் அந்தமானில் குடியேற்றப்படும் என அவ்வறிக்கை கூறுகிறது.

★ பெல்லாரி மாவட்டத்தை மைசூரில் நீடித்து வைத்துக் கொள்ள மத்திய சர்க்கார் முடிவு செய்ததை எதிர்த்து பெல்லாரியில் ஹர்த்தால் கடைப்பிடிக்கப்பட்டது.

★ மார்ச் 20: நடிகவேள் ராதாவின் நாடகத்தைப் பார்த்தாவது பகுத்தறிவைப் பெறுமாறு மந்திரி சுப்பிரமணியத்திற்கு யோசனை கூறப்பட்டது.

★ இந்திய-பாக் எல்லையில் மீண்டும் இருநாட்டுப் படைகளும் மோதின.

# மனைவிக்கு... கணவர்க்கு...

— நாகமுத்தையா —

9

அன்புக் கமலா,

'ஒருவனுடைய புறவெளித் தோற்றத்தைப் புகைப்படத்தில் காணு வதைப்போல அகவெளித் தோற்றத்தைக் காணுவதற்குக் கடிதம் சரியான நிலைக்களம் ஆகும்,' என்ற ஆங்கிலப் புலவனின் வார்த்தைகளை நான் படித்தபோது அவ்வளவாக ரசித்தும் படித்ததில்லை. இன்று அனுபவ வாயிலாக அதே உண்மையை அறிகின்றபோது அவனை அறிஞன் என்று கூறாது இருக்கமுடியவில்லை. உன் கடிதங்கள் உன்னை என் முன்னே கொண்டுவந்து நிறுத்துகின்றன. 'அன்புள்ள அத்தான்' என்று நீ அழைக்கின்றபோது பச்சைப் பசுங்கிளியாகத் தோன்றுகின்றாய். 'சுற்றுப்புறம் சூழ்நிலைமீது குற்றத்தைச் சுமத்தும் சுற்றவர் நிலையில் திற்றிட விழையும் நீங்கள் பொறையேயோடிய புண்ணைப் புனுகு பூசி மறைக்க முயலுதல்போல, வேசியின் வலையில் வீழ்ந்ததையெல்லாம் மாசடைத்து அன்று என மறைக்க முயலுகிறீர்கள்,' என்று நீ சொல்லு போது தென்றூட்டுப் புயல்போல மாறிவிடுகிறாய். ஆக உன் கடிதத் திலேயே நான் உன்னைப் பல வடிவங்களில் காணுகின்றேன். அதற்குக் காரணம், உனக்கு என்மேல் இருக்கும் அன்பும் நான் தீயன செய்து விட்டேன் என்பதால் உண்டாய வெறுப்புமே ஆகும்.

'அன்பை அடிப்படையாகக் கொண்டு விரும்பாமல், பொருளையே அடிப்படையாகக் கொண்டு பொய் விருப்புக்காட்டி பழகுகிற பெண்ணின் தொடர்பு என்றேனும் ஒருநாள் இழுக்கையே தரும்' (குறள்-911)

இக்குறள் உண்மையினை நான் உணராமல் இருந்தது என் மடமையே ஆகும். பொருள் உள்ளபோது போற்றிப் புகழ்கின்ற வேசியின் அதே வாய் பொருளற்றபோது இழிந்துரைத்து இன்னற் படுத்தும் தகையதாம். ஆனால் கட்டிய மனைவியின் வாயோ தேன் ததும்பும் கூடு; இருநிறைந்த வீடு, அதனின்றும் பிறவாது கேடு.

'ஆளை விரும்பாமல் ஆள் தந்த பொருளையே விரும்பி அகத்து அன்பு இல்லாதாளின் முயக்கமானது, கூலிக்கும் பிணம் எடுப்பார் இருட்டறை யில் கிடந்த, தாம் முன்கண்டறியாததும் தமக்குச் சொந்தம் அல்லாததுமான ஓர் அயற்பிணத்தைத் தழுவி எடுப்பது போலாகும்,' என்று என் தமிழாசிரியர் தமிழ் வகுப்பில் எப்போதோ சொன்னது இன்னமும் என் நினைவில் இருக்கிறது.

மேலும் என் நண்பர் ஒருவர் சொன்னார் பரத்தையர் பரமசிவனுக் குச் சமமாகும் என்று. அதுவும் இன்று நினைவுக்கு வருகிறது.

'வரைவின் மாதராய் இருத்தலால் பதியிலா மாண்பால் குரைகடல் கடற்புவி மாந்தர்செய் வினைத்திறம் குறித்துக் கரைசெய் போகமங் குறுத்தலால் கடையில் மங்கலத்தால் உரைசெய் வேசியர் அரன்இதற்கு ஐயமும் உளதோ' என்பதுதான் நண்பன் சொன்ன பாட்டு.

விலைமகளிர் என்று பேசப்படுவோர் ஒரு கட்டுப்பாட்டுக்கு அடங்காத ரென்றிருப்பதாலும், குறிப்பிட்ட ஒருவனைக் கணவனாகக் கொள் ளாமையாலும், கடல்சூழும் நிலவுலகில் வாழும் ஆண்கள் தரும் கைப் பொருளையே அளவாகக் கொண்டு அவரவருக்கேற்ற அளவில் இன்பத்தைத் தருதலாலும் மங்கலத்தாலியே இல்லாமையால் அறுபடாத தாலியுடைய மங்கலப் பெண்களாக வாழ்தலாலும் வேசியர் சிவனுக்குச் சமமாகும்.

தன்னுடைய மனைவி மலையின் மகளாக இருப்பதாலும், தனக்கென ஒரு குறிப்பிட்ட இடம் இல்லாமல் உலகனைத்தும் பரவி இருத்தலாலும், நீர்சூழும் நிலவுலக மக்களின் செய்கருமத்திற்கேற்ப அவரவர்களுக் குரிய பலன்களைத் தருதலாலும், எல்லையற்ற மங்கலப் பொருளாக மதிக்கப்படுவதாலும் பரமசிவனுக்குப் பரத்தை ஒப்பாகும்.

கருத்துச் சரியோ தப்போ கவிதை தரமுள்ள கவிதையாகும்.

இதையெல்லாம் முன்னரே, ஆய்ந்து அறிந்திருந்தால் கருமத்தை எண்ணித் துணிந்திருந்தால்-இந்த அவதி ஏற்பட்டிருக்க நியாயமே இல்லை. அறிவை அனுபவ வாயிலாக அறிகின்றபோது உண்மை வலுப் பெறுகிறது. ஆணித்தரமாகப் பதிவும் பெறுகிறது. இதற்காக எதனை யும் அனுபவித்த பிறகே ஏற்றுக்கொள்ளுவது என்ற இயல்பு உணர்ச்சி வளர்ந்து வருமாயின் உலகில் நீதியை நிலைநாட்டுவதற்கு முன்னர் அநீதி ஆயிரமாயிரமாகப் பாவி உலகத்தையே அழித்துவிடுவது அழிக்கமுடியாத உண்மையாகிவிடும். பிறிதோர் இடத்தே மூன்று மூடச்செயல்களைக் கூறு எனக் கேட்க ஒரு புலவர் பதில் சொன்னாராம்: 'பெருந்தன்மை உள்ள மக்களிடத்திலிருந்து விலகி நிற்றலும், உரிமையற்ற பெண்ணை இச்சித் தலும், சிறப்பைத் தராத காரியங்களைச் செய்ய துணிந்து நிற்றலும் ஆகிய இம்மூன்றும் மூடர் செய்கையாகும்; அவர் தந்த உண்மைப் பொருள்தான் என்னே ?

''பிரகாசம் மிகுந்த நெற்றியை உடைய பெண்கள் துன்பத்தைச் செய்யுங் கருத்தைப் பிறர் அறியாவண்ணம் தம்முள் அடக்கிக்கொண்டு காமுகர் தன்னிடத்துத் தெளிவாகச் சொல்லிய வார்த்தைகளை செவி யாரக் கேட்டு அவற்றை உண்மை என்று நம்பி தம்மவர் என்று வேசியரைக் கொள்ளுவர். அத்தகையோர்-தம் உடம்பினைத் தமக்கே உரிதென்று கருதும் இயல்பினை உடையவர்கள்-யாருக்குமே சுற்றத்தார் ஆகமாட்டார்கள்.''

இதனை எட்டாம் வகுப்புப் படிக்கையில் திரு. கந்தசாமி வாத்தியார் சொல்லித் தந்தார். அதற்குரிய பாடல் இதுதான்.

> ஊறுசெய் நெஞ்சந்தம் உள்ளடக்கி ஒண்ணுதலார்
> தேற மொழிந்த மொழிகேட்டுத்-தேறி
> எமரென்று கொள்வாரும் கொள்பவே யார்க்குந்
> தமரல்லர் தம்முடம் பினர்.

இந்த நாலடியார் சொன்னதும் வள்ளுவரின் வாயமுதும் தனிப்புலவர் தண்ணமுதும் அறிந்துணர்ந்திருந்தும் நான் குற்றஞ் செய்துவிட்டேன் என் குறுந்தொகைக்கு. குலமகளே, என்னை மன்னித்துவிடு இன்னும் இருவாரத்தில் இல்லந் தேடி வருகிறேன், சற்றே பொறுத்திருப்பாய்.

உன்னன்புள்ள,
மாவண்ணன்.

— சித்தாராமன் —

அன்புள்ள அத்தான்,

இப்படி 'அன்புள்ள அத்தான்' என்று உங்களை அழைக்கலாமா; அது சரியா? என்ற ஐயங்கள் எனக்கு இப்பொழுது புதிதாகத் தோன்றுகிறது. காரணம் என்னவென்கின்றீர்களா? அன்புள்ள அத்தான்! அரைநொடியில் வாருங்கள் அடியாளைக் கூடுங்கள். அல்லும் பகலும் அனவரதமும் அன்றில் பறவைபோல என்றும் பிரியாதிருப் போம் என்று எத்தனைத் தடவைகள் எழுதிவிட்டேன். அதற்கு நீங்கள் ''கண்ணே! மணியே! கரும்பே! தேனே! பொன்னார் சிலையே' பூங்குழற் பாவாய்! இன்னே வந்து இன்பம் தருவேன்! பெண்ணிவள் பரத்தை பெரிதும் வெறுத்தனன் கண்ணே உன்னை கடிதில் அடைவேன். என் தவறுணர்ந்தேன். இனியும் நீட்டேன்,'' என்று கடிதத்திற்குக் கடிதம் சொல்லடுக்குகளைக் கொள்ளை கொள்ளையாக கூட்டி எழுதிவிடுகிறீர்கள். ஆனால் பலன் பூஜ்யமாகத்தான் இருக்கிறது.

இருந்தும் என்ன செய்வது. முன்மேல் வேட்டி விழுந்துவிட்டது. மெல்ல மெல்லத் தானே எடுத்தாக வேண்டும். கடிதில் வரவில்லை என்று வேட்டியை கடிந்துகொள்ளவா முடிகிறது. கடுங்கோபம் வரினும் அதை அடுத்துள்ளவர்கள் மேல்தான் காட்டுகிறேன். காரணம் நீங்கள் என் அன்புக் கணவர் அல்லவா? கோபித்துக்கொள்ள முடியுமா? தமிழ்க்குலத்தில் பிறந்தவள் அல்லவா நான்? இதைப் போன்றே ''பழந்தமிழ் நாட்டில் பரத்தையை நாடிச் சென்ற கணவனின் நிலை இப்போது பரத்தையர் வீட்டில் எவ்வாறுளது என்று கூறும் பாணனை வெறுத்து கூறுகிறாள் மனைவி.''

மேற்கண்ட காட்சியை விளக்கும் பாடல் நாலடியாரில் உள்ளது. இதோ அது.

> கொடியவை கூறுதி பாணநீ கூறி
> னடிபைய விட்டொதுங்கிச் சென்று-துடியி
> னிடக்கண் ணனையம்யா மூரற் கதனால்
> வலக்கண் ணனையார்க் குரை.

பழந்தமிழ்ப் பாவை பாணனை வெறுத்தனள். தன் பதியை வெறுத்தாள் இல்லை. அதுவே, என் நிலையும் ஆகும். அழகான மலர் அரும்பவிழ்ந்து, ஒளிவீசி, தேன் சிதறி நிற்கிறது. இருந்தும் வண்டு அடுத்த மலர்த் தேனை சுவைத்தபடி யுவதே என்று அழகான மலர் அங்கலாய்ப்பதில் என்ன பயன். தேன் மலரில் முடிந்ததும் அடுத்த மலரை நாடுகிறது வண்டு. அப்படித்தான் சமாதானம் கூறிக்கொள்ள முடிகிறது. என்னிடம் கோபம் கிடையாது. தங்களுக்காக இந்த இதயக் கதவு எந்த நேரமும் திறந்தே இருக்கும். இனியும் காலம் நீட்டாது இனிது வந்து என்னை அடையுங்கள். இல்லற வாழ்க்கையில் ஈடில்லா இன்பம் மிகக் காண்போம்.

உங்கள் கடிதங்களைப் படிக்கும்போது நீங்கள் ரொம்பவும் நல்லவர் போலவும், உங்களைச் சந்தர்ப்பங்கள் கெடுத்துவிட்டதாகவும், போதாதற்குப் பரத்தையர் என்ற கொடிய பெண்கள் உங்களைக் கேட்டிற்கு ஆளாக்கிவிட்டதாகவும் அறியப்படுத்தி உள்ளீர்கள். நானும் கூட 'நல்ல மனிதர் இரசக் கோளாறுகளால் கெட்டுப்போயிருக்கிறார் என்று நினைத்து வந்தேன். ஆனால், வருகிறேன் வருகிறேன் என்று நாட்களைக் கடத்தி வருவதைப் பார்த்தால் எனக்கு ஐயப்பாடு அதிகரிக் கிறது. சூழ்நிலை சந்தர்ப்பங்களை துணையாக்கிக் கொண்டு நீங்கள் அங்கு உள்ள பெண்களைச் சூறையாடுகிறீர்களோ என்றுகூட நினைக்கத் தூண்டுகிறது.

ருசிகண்ட பூனை சுவைகண்ட பொருளை எளிதில் மறந்துவிடாதாம். அதுபோல அடுத்தவளிடம் அனுபவித்து அறிந்துகொண்ட சுவையை இன்னும் நீங்கள் எத்தனை பேரிடம் அனுபவிக்க நினைக்கிறீர்களோ தெரியவில்லை; அதை நினைத்தால் எனக்கு மயக்கம் ஒருபுறம், மனவேதனை ஒருபுறம். அத்தான், வேண்டாம் அந்தத் தீய வழி.

'எதிலார் இட்கண் குருடனாய்...' என்ற பாடலை நினைத்துக்கொள்ளுங் கள். செம்மை நெறியைப் பின்பற்றி வாழ முயலுங்கள். அது நமக்கே நம் குலத்துக்கே பெருமை தருவதாகும். பழந்தமிழ்ப் பாடல்களைப் பயன் கருதிப் படித்தவர்கள் அறிவர் பரத்தையர் தொடர்பால் படு கின்ற கேடுகளை-தீங்குகளை.

திருந்திய உள்ளத்துடன் பொருந்திய உவகை சேர வருந்தும் என் நெஞ்சத்துக்கு இருந்து இன்பூட்டும் வகை காண வந்தருள வேண்டு கிறேன். இரு வாரங்களில் வருவதாகச் சொல்லி உள்ளீர்கள். இரு வாரம் தாளாது என் நெஞ்சம் மறுநாளே புறப்பட்டு வருக. உங்கள் வரவையே எதிர்நோக்கி உள்ளேன். வார்த்தைகள் அனுப்பவேண்டாம்.

அன்புள்ள
கமலா.

திரு. நாகமுத்தையாவின் 9-வது கடிதத்துக்கு பதில் தருப வர்கள் இலக்கிய எடுத்துக் காட்டுகளுடன் 29-3-1956க்குள் எழுதி அனுப்ப வேண்டுகிறோம்.



# 'வண்டல்' வழி!

அந்திநேரம். வெண்ணிறக் கதிர் களைப் பரப்பும் பகலவன் மின்னல் ஒளியை வாரி வழங்கிக்கொண்டிருந் தான். அடிவானம் செக்கோலத்தை ஆடையாக அணியப்பெற்று, துடி யிடைகளின் கோவ்வை இகழ்களைப் போட்டிக்கழைத்தது.

ஆம்...அது மலர்மணம் மிதந் தோடி வரும் தென்றல் உலவும் பூம்பொழில்.........இல்லை இல்லை! இயற்கையன்னை களிநடம் புரியும் கலை அரங்கம். அவ்வரங்கத்தில் நடிக்கப் பெறும் கூத்துக்கு, கதா நாயகன், கதாநாயகி பாகத்தில நடிப்பவர் நாடோறும் பிரிந்துகூடும் களவொழுக்கத்தில் ஈடுபடும் இளங் காதலர்கள்தாம்.

ஆனால்...அன்று, அன்றலர்ந்த தாமரை மலரனைய முகத்தாள், மண மிழந்த கசங்கிய மலரொப்பக் காட்சி யளிப்பானேன்! முகிலினங்கள் திகில் கொள்ளும்படி, இருண்டு-சுருண்டு-அடர்ந்திருக்கும் அவளின் கரிய கூந்தல் சரிந்து கிடப்பானேன்! மதிமருளும் வட்ட முகத்தழகியின் குவளைக் கண்களிலே கவலைஉருவம் நிழலாடுவானேன்! குயில் நாணும் குரலோசையுடையாள் 'குமுறும் எரிமலை' யொப்ப பெருமூச்சு விடு வானேன்! துள்ளிக் குதித்தோடி வந்து காதல் மொழிபேசும் கட டழகி...இன்று பேசாத பொற்சித்திர மாய் பொலிவுறுவானேன்! ஏன்?... அவள் நரம்பற்ற வீணையா-மண மிழந்த மலரா-உடைந்த கண் ணாடியா? அதுவும் இல்லை...ஆம்... அவள் சுருதி குறையப் பெற்ற இசைகுளுமைகலவாத- தென்றல். சுருதியுடன் பொருந்தினால்தான் இசை இனிக்கும்...குளுமை குல வினால்தான் தென்றல் இன் னுணர்வை அளிக்கும். அஃதனையது அவளின் காதல் வாழ்வு.

அவன்...ஆம்! ஒரு கட்டிளங் காளை; எழிலும் இளமையும் மெரு கேற்றின உலம்நிகர் தோளன்; 'கூற்றுடன்று மேல்வரினும்' சீற்ற முடன் ஆர்த்தெழும் அடலேறு. அரசியல் அலுவல் பொருட்டு அரசன் தன் ஆணையால் சின்னாட்கள் அயலூர் அடைய நிலை ஏற் பட்டது அவனுக்கு. ஆதலின் அவனின் இதயத் தடாகத்திலே 'காதல், கடமை'என்னும் உணர்ச்சி அலைகள் அலம்பின. கடமை யுள்ளமோ 'கனிமொழியாளின் கண் களைக் கலங்கிய குட்டையாக மாற்றுதே' எனக் கதறியது. இறுதி யில் காதல் தரு பூத்துக் குலுங்க கடமைநீர் பாய்ச்சவேண்டும் என் பதை உணர்ந்தான். விடைபெற காதலியிடம் கடுகிச் சென்றான். ஆனால்...அவளின் காந்தக் கருவிழி யினின்று வழியும் கண்ணீர் அருவி யும், நிலம் நோக்கும் சோகக்களை படர்ந்த மதிமுகமும்...அவனுக்கு பிரியாவிடை நல்கின. தலைவன் கடந்தான்; தலைவி களிதுன்பச் சேற்றில் மூழ்கினாள்.

பூம்பொழில் சென்றாள். மடப் பிணை, மரையினோடு மகிழ்ந்து விளை யாடுவதையும், மடமயிலும், ஆண் மயிலும் இன்பத்தின் எல்லையில் இல்லறம் நடத்துவதையும், வண்ண மலர்கள் வண்டுக் காதலர்களுக்கு மதுவுண்ண இதழ்விரித்துக் கொடுப் பதையும் காணலுற்றாள்போலும்! அவளின் உள்ளக்கடலிலேமுன்னைய நிகழ்ச்சிகள் அலைமோதின. இதயப் பூங்காவிலே பலவண்ண மலர்கள் அரும்பின.

மலர்மலி பூங்காவினின்று தன் கொழுநன் பிரியா விடைபெற்றுக் கொண்டுபோன திக்கை நோக் கினாள்; அவளின் இதயம் கவலை யென்னும் சம்மட்டியால் அடிக்கப் பட்டு சுக்குநூறாய் உடைவது போன்றிருந்தது. 'உரு காட்டும் ஆடி'யனைய அவளின் பிறைநுதலில் படர்ந்த துன்பரேகைகள் அனுப விக்கும் இன்னல்களைப் பளிச்செனப் காட்டியது. தலைவன் விட்டுச் சென்ற மலர்மலிந்த எழிற்பொழிலை நோக்கினாள்? பிரிவாற்றாமையால் மைதீட்டப் பெற்ற கண்கள் செவ் வனத்தை யொப்பச் சிவந்தன. விழிகள் குளமாயின, கருவிழி செவ்விழி உருக்கொண்டது; துன்பமே உருக்கொண்டாள்.

இந்நிலையினைக் காணப்பெற்ற செவிலித்தாய் அவளை அணுகி தண் ணொளி வீசும் மலர்வதனத்திலே துன்பக்களையைக் காணப்பெறாத வளாய், 'மகளே நினக்கு யாதொரு குறையும் வைத்திலேன்; ஆயினும் ஒருவாறு காணப்படுகின்றாய், நின்னையாட் கொண்ட இன்னல் தான் என்ன? என்னிடம் ஒளியாது உரை' என வினவ மாற்றமுரைக்கப் போந்த மலர்விழியாள் உட்பொருளை உள்ளடக்கி, தலையின்மீது நாண மென்னும் பாரம் அழுத்த-அச்சத் தால் அகங்கலங்க அம்மையே கடல் வந்தேன் வண்டல் சிதைத்து என மொழிந்தாள்.

மேற்பட்ட கருத்துக்களைத்தான் ஆசிரியர் 'மாறம் பொறையனார்' தலைவியின் வாயிலாகக் கூறுகின்றார்.

அக்கருத்து மணம் பரவும் பாமலர் இதோ :—

> கொண்கன் பிரிந்த
> குளிர்பூம் பொழில்நோக்கி
> உண்கண் சிவப்ப
> அழுதேன்; ஒளிமுகம்
> கண்டன்னை, 'எவ்வம்யா
> தென்னக் கடல்வந்தேன்
> வண்டல் சிதைத்த'
> தென் றேன்.

—ஐந்திணை ஐம்பது.

— ஆப்ரகாம்.

சிலம்பு நாடக மன்றம்
அளிக்கும்
சிந்தனை விருந்து !
அறிஞர் அண்ணு
தலைமையில்
பன்மொழிப்புலவர்
கா. அப்பாதுரையாரின்
''காற்றும் மழையும்''
நாடகமாக்கியவர் :
இரா. பணிவேந்தன்
22-4-56 ஞாயிறு மாலை 6-30 மணிக்கு,
சென்னை ஒற்றைவாடையில்
நடைபெறும்
பாடல்கள் :
கண்ணதாசன்
நடிகர்கள் :
கண்ணதாசன், வளையாபதி முத்துக்கிருஷ்ணன், எஸ். எஸ். பி. லிங்கம், வனிதா, சாரதா, மல்லிகா மற்றும் மன்ற உறுப் பினர்கள்.
கட்டணம் : 3, 2, 1. 0-8-0
என். கிருட்டினன்,
செயலாளர்.

# காதலிக்கு!

துரை மாணிக்கம்

> பீடுறு மயிலே ! பிரிந்தனன் எனநீ
> பிணிபடத் துடித்தெனை எங்கும்
> தேடுவ தறிந்தேன்! தேம்புவ தறிந்தேன் !
> தேய்வுறும் நிலவா யுடலம்
> வாடுவ தறிந்தேன்! வாள்விழி! இனிநீ
> வாடுவ தொழித்திடு; தமிழ்வாழ்
> நாடணி செய்யும் நற்படை தன்னில்
> நான்புகுந் திறப்பினும் இறப்பேன் !
>
> திங்கில வுளத்தோய் ! துறந்தனன் எனநீ
> துஞ்சலும் உணவதும் துறந்தே
> ஏங்குவ தறிந்தேன் ! இளைப்பதை யறிந்தேன் !
> எழிலுடல் குலைவது மறிந்தேன் !
> பூங்கொடி வருந்தேல் ! பொன்னு டுய்யப்
> போர்ப்படை சேர்ந்தனன் ! இனிநான்
> ''மாங்குயில் கூவுஞ் சோலையில்'' வாழ்ந்தே
> மாளுவ தாகினும் மாள்வேன் !
>
> கரும்பெனும் மொழியால், கருவிழி அசைப்பால்
> கார்குழல் நெளிவால் இன்பம்
> தரும்பெண் பாவாய்! நான்பிரிந் துன்னைத்
> தனிவிட் டேனென எனையே,
> வரும்படிக் கூறிக் கண்ணீர் வார்ப்பதை
> வார்குழல் அறிவேன் ! எனினும்
> இரும்படி என்தோள் ! என்தமிழ் நாட்டுக்
> கிறப்பினும் இறப்பேன் ஈந்தே !
>
> நீதரும் இன்பம் நிலையெனின் அன்பே
> விலையிலே தமிழ்நாட் டின்பம் !
> மீதுறும் துயரால் வருந்துவ தொருத்தி !
> மீட்பால் மகிழ்வது நாடு !
> தீதுறும் மணித்தமிழ் நாட்டினை மீட்கத்
> துணிபடை சேர்ந்தனன்; வருந்தேல்!
> மாதர சென்தோள் மாளினும் மாளும்!
> மறுபடை கூட்டுக நீயே !

★ ★ ★

வாலாஜாபாத் இந்துமதப் பாடசாலையை பொதுச்செயலாளர் நெடுஞ்செழியன் அவர்களும், ''போர்வாள்'' ஆசிரியர் காஞ்சி மணிமொழியாரும் பார்வையிட்டபோது எடுத்த படம்.

★ ★ ★




"அழகு! அழகு! அது பாவச் சுமை! வாலிபத்தை உறிஞ்சும் 'மாய' அட்டை! கேவலம், மனிதன் அதற்கு அடிமைப்பட்டு விடுகிறுன். சை! என்ன உலகம்! சைத்தான் என்னென்ன உருவில் வருகிறுன்? பட்டுப்பூச்சிகள்! கொட்டும் தேள்கள்! பாபாத்மாக்கள்! பரமபிதாக்கள்!! சேச்சே! பகவானே உன் படைப்பா இதெல்லாம்? ஆம், உன் சிருஷ்டிகள்தான்! நாயகனின் சிருஷ்டிகளை நாடு உணரவில்லை. புரியாத மக்கள் கூட்டம்!

"உலகத்தைக் கெடுப்பது அழகு; நெறிமுறையை அழிப்பது அழகு. கூடாது. அழகு பலரறிய இருக்கக் கூடாது. பஞ்சாரத்தில் போட்டு அடைக்கவேண்டும்."

—பெரிய வைராகி, சித்துள்ள சாமியார், அருள்பெற்ற யோகி என்று பொதுமக்களால் மதிக்கப் பெற்ற அருள் ஜகன்னுதரின் புலம்பல் இது. துஷ்டர்களை வசப்படுத்தி அவர்களைத் தூய்மையுள்ள ரத்தினங்களாக்கிவிட்டார் என்பதற்காக அவருக்கு செல்வாக்கு மலைபோல் உயர்ந்தது; கடல்போல் விரிந்தது. ஆண்டிகள் தலைவர் அவர். ஆனல் ஆண்டைகளும் அவனுக்குத் தலை

கொண்டு எழுப்பப்பட்டதுதான் ஊருக்குக் கடைசியிலே இருக்கும் 'அறநெறி மன்றம்.'

★

அருள் ஜகன்னுதர் சாதாரண ஜகன்னுதஞக இருந்த காலத்தில் யாரும் எதிர்பார்க்கவில்லை அவர் துறவியாவார் என்று. சில்க் சட்டை, மஸ்லின் வேட்டி, நெற்றியிலே சந்தனப் பொட்டு—அந்தக் காலத்தில் ஜகன்னுதரின் அலங்காரச் சாதனங்கள் இவை. ஆனல் இப்போது? பரட்டைத் தலை, பாதகுறடு, பழுப்பு

இவைகளைத் தினம் தினம் பார்த்து மகிழ்வார். அந்த நேரம் பார்த்துநகரத்துச் சுவையான செய்திகளை பிரதம சீடன் ஞானப்பிரகாசம் ஜகநாதரிடம் சொல்லுவான். ஜகன்னுதர் ரசிப்பார். அப்போதுதான் வாய்விட்டுச் சிரிப்பார். அதற்குள்ளாக பாதகாணிக்கை வைக்க பாபாத்மாக்கள் யாராவது வந்து விடுவார்கள். 'திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம்' என்று முணங்கிக் கொண்டே ஜகன்னுதர் புலித்தோல் படுக்கைக்குப் போய்விடுவார். சுகவாசி. எப்படியோ அந்தச் சுகமும்

ஊர் திருவீழிமூர்" என்றுன்.

"திருச்சிற்றம்பலம்! திருச்சிற்றம்பலம்! சை! மனிதர்கள் காடைப் பறவைகள்!

"ஞானம் நீ ஏன் இதை என்னிடம் இவ்வளவு நாட்களாகச் சொல்லவில்லை? ஆயிரக்கலம் நெல்லுக்கு ஒரு அந்து போதுமே! இந்த ஊரை புனிதமாக்கிவிட்டதாக அல்லவா நான் எண்ணிக்கொண்டிருக்கிறேன். அத்தனையும் பாழ்! பாழ்! என் ஆசையெல்லாம் தூள்! தூள்! கோபி! சே! மற்றெரு பாவப்பிண்டம்! இன்பக்கடை வியாபாரம்! ஜகநாதச் சன்னதியின் ஊரிலேயா கோபியின் வளைவும் நெளிவும்! அடியேன் பொறுக்கமாட்டேன். ஆண்டவன் அழைக்கிறுன்—பழனிவேலன் கூப்பிடுகிறுன்! பூஜையறைக்குப் போகிறேன். அந்த விஷவிருட்சத்தை வேரோடு சாய்க்கிறேன்." என்று புலம்பிக்கொண்டே ஜகநாதர் பூஜையறைக்குள் நுழைந்தார். வெள்ளி மணிக்கதவு ஒலிகிளப்பியது. பொற்தட்டில் சூடம் எரிந்தது. ஜகநாதர் தீபாராதனை நடத்தினர். கோபியைச்

"கல்வி நடத்தைக்கு ஆதாரம்; விளக்கம் அறிவுக்குப் பாத்திரம்; பகுத்தறிவு நன்மையின் தோழன்; பேராசை துயரத்திற்கு வாகனம்; செல்வம் கர்விகளின் போர்வை: அழகு ஒழுக்கம் தின்னும் கறையான்"—என்று உபதேசம் செய்த உண்மைத் துறவிதான் ஜகநாதர். ஆனல் கடைசிக் காலத்தில் அவரது உபதேசம், "அழகுக்கும் துறவுக்கும் நீங்காப் பகையானுல் அந்தத் துறவு உலகத்திற்குத் தேவையில்லை" என்ற நிலைக்கல்லவா வந்துவிட்டது.

வணங்கினர். பேசும் தெய்வம் என்று முழங்கால் தேய மண்டியிட்டுக் கிடந்தனர். பாற்சோறும், பாதாம் பருப்பும், வேற்பலாவின் தேன்சுளையும் ஜகன்னுதரின் மேனியை ஜகஜோதியாக்கி வைத்திருந்தது. நகத்தில் அப்பியிருக்கும் அழுக்கோடு நறுமலர்ச்செண்டை நுகர்வார். 'பகவானே உன் படைப்பினில் அத்தனையும் அற்புதம்! அத்தனையும் அற்புதம்!' என்று புகழ்வார்.

பொதுமக்கள் ஜகன்னுதரின் தொண்டினை புனிதமானது என்று மதித்தனர். புரட்சிச் சாமியார் என்று வர்ணித்தார்கள். அதில் ஓரளவு உண்மையும் இருந்தது. வாலிபர்களைத் திருத்தினர். வஞ்சக நெஞ்சினரை வழிப்படுத்தினர். அவருடைய ஆஸ்ரமம் அந்த ஊருக்கு உயர்நீதி மன்றமாகக் கருதப்பட்டது. ஜகன்னுதச் சன்னதிகளைப் பார்ப்பதற்கு பவுன் ஒன்று காணிக்கை செலுத்த வேண்டும். அவ்வளவு மரியாதை அவருக்கு. தூங்கிக் கிடந்த ஊர், அவர் வந்ததும் விழித்துப் பார்த்தது. சீமான்புரத்துச் செல்வந்தர்கள் நாடிவந்த நாரீமணிகளோடு திருவிளையாடல்கள் புரிந்துவிட்டு ஜகன்னுதரைப் பார்த்துப் பாதகாணிக்கை வைக்காமல் போகமாட்டார்கள்! இப்படிப் பாவக்கறை படிந்த செல்வம் எவ்வளவு தெரியுமா? அவைகளைக்

நிற ஆடை! அகத்திலே தோன்றும் ஒரு சில எண்ணங்களுக்குத்தான் புற மாறுதல் செய்யும் சக்தி உண்டு. ஜகன்னுதரின் வெளித்தோற்றம் அதற்கு எடுத்துக்காட்டு. அவர் மேற்கொண்ட உண்மைத் துறவு அவரைக் 'கற்றறிந்தவர்' பட்டியலில் சேர்த்தது. உருக்குலைந்து கிடந்த ஊரை, ஒழுக்கம் கெட்டு அழிந்துவிடும் நிலையிலிருந்த ஊரை மீண்டும் தலைதூக்க வைத்ததற்கு ஜகன்னுதர் பெற்ற ஊதியம் 'உயர்ந்தவர், படிப்பாளி, புதுமை விரும்பும் பண்டாரப் பெருந்தகை' என்ற பட்டங்கள்தாம்!

நாளைக்கொரு கூட்டம், வேளைக்கொரு ஆராய்ச்சி என்று தொண்டு புரிந்த அந்த இளந்துறவி...?

பாவம், இன்று அவரது கல்லறை மீதிருந்து ஆந்தைகள்தான் அலறுகின்றன. அதோ பனங்கூட்டம்! அதற்குள்ளேதானிருக்கிறது அவரது சமாதி! அதற்குப் பக்கத்தில் கம்பீரமாகத் தெரிகிறதே அதுதான் அவர் வாழ்ந்த ஆஸ்ரமம். பெயர் ஆனந்த மடம். ஒரு பக்கம் அழகான கருங்குரங்கு கொய்யாமரத்திலே தாவித் திரியும்; மற்றெரு பக்கம் வேட்டை நாய்கள் கட்டிக் கிடக்கும். இன்னெரு பக்கத்தில் கூட்டுக்குள்ளடைபட்ட புனுகுபூனை! சந்தனமணக்கும் ஜகந்நாதச் சாமியார்

ஜகன்னுதருக்கு உண்மையான புகழுடன் கிடைத்தது. வெண்புறு வளர்க்கப்படும் அழகான பறவைதான், ஆனல் பாலும் பழமும் அழகில்லாத மைனுவுக்குத்தானே கிடைக்கிறது!

அன்று கார்த்திகை. ஊரெல்லாம் அமளி. வீடெல்லாம் அகல்விளக்கு. ஜகன்னுதர் ஆனந்தமடத்து மேற்தளத்தில் நின்று நகரின் மேற்தோற்றத்தை சுவைத்துக் கொண்டிருந்தார். வழக்கம்போல் பூனைமாதிரி ஞானப்பிரகாசம் சாமியாரின் பக்கம் வந்தான். ஊரைப்பற்றி அவருக்குச் சொல்லிக் கொண்டிருந்தான். ஜகன்னுதர் ஒரு நீலவிளக்கை விரல்நீட்டிக் காட்டி, "ஞானம், அதோ தெரிகிறதே அந்த வீடு யாருடையது?" என்றூர்.

"அதுவா...!"

"ஆமாம் அதுதான்! அதோ மலையடிவாரத்தில் இருக்கிறதல்லவா அது!" என்றூர் அழுத்தம் திருத்தமாக ஜகன்னுதர்.

ஞானப்பிரகாசம் யோசித்து, "அதுவா அது......கோபி வீடு" என்றுன் கொஞ்சம் மிரட்சியோடு.

"கோபியா? அது யார் திருச்சிற்றம்பலம்?"

"தாசி! புதிதாக இங்கு வந்திருக்கிறுன். சொந்த

சீர்திருத்த, முருகனிடம் அனுமதி கேட்டார். பல்லியொன்று கத்தியது. முறுவல் பூத்தார் ஜகநாதர். "ஞானம்! என் அப்பன் எனக்குக் கைகொடுத்துவிட்டான். கோபியைச் சீர்திருத்த கருணைபுரிவதாக வாக்களித்துவிட்டான்" என்று கத்திக்கொண்டே பூஜையறையை விட்டு வெளியே வந்தார். ஆனந்தமடத்தில் யாரையும் காணவில்லை. "ஞானம் ஞானம்!" என்று ஜகநாதர் கதறினர். அவர் கத்தியே பழக்கமில்லாததால் தொண்டை கம்மியது. தோட்டத்துப் பக்கம் போனூர். கிணற்றைச் சுற்றி சீடர்கள் நின்றுகொண்டிருந்தார்கள். "என்ன கூட்டம்?" என்றூர் சன்னதி. ஒருவரும் பதில் சொல்லவில்லை. அருகிலே சென்று பார்த்தார். ஞானம் கிணற்றுக்குள் துடித்துக் கிடந்தான். யாரும் இறங்கி அவனைக் காப்பாற்ற முன்வரவில்லை. காரணம் அங்கே சன்னதி உட்பட யாருக்கும் நீச்சல் தெரியாது. ஒருவரை ஒருவர் பார்த்து நின்றூர்கள். சன்னதி தியானத்திலிறங்கினர். ஞானம் சாகக் கிடக்கிறுன்.

— அடுத்த இதழில் —






கண்ணதாசன்

# 21

'உண்மையிலேயே அத்தான் உன்னை விரும்புகிறூர். நீயும் அவரை விரும்புகிறுயா?"

—இந்திரா இந்தக் கேள்வியைக் கேட்டதும் கமலம் திகைத்துப் போனுள். "அக்கா!" என்றுள் நடுங்கியவாறு.

"பயப்படாதே கமலம்! நாம் தானே பேசிக்கொண்டிருக்கிறோம்! வேறு யாருமில்லை. அக்காளிடம் பேசுகிறோமென்று கருதாதே! உன்னிடத்தில் அக்கரையுள்ள யாரோ ஒருத்தியோடு பேசுவதாக எண்ணிக்கொண்டு பதில் சொல். மனதில் விருப்பதை அப்படியே சொல். எதையும் மறைக்க வேண்டிய அவசியமில்லை. எந்த வார்த்தைகளும் இனி என் மனதைப் புண்படுத்த முடியாது. பட்டுப்பட்டுக் காய்த்துப் போய்விட்டது உள்ளம். இப்போது சலனமற்ற மனதோடுதான் உன்னைக் கேட்கிறேன். தைரியமாகப் பதில் சொல்" என்றுள் இந்திரா.

"அக்கா! உண்மையைச்சொல்கிறேன். அவரிடத்தில் எனக்குக் கொஞ்சங்கூட ஆசை இல்லை. அவரிடம் நான் காட்டும் அக்கரையெல்லாம் உன் பொருட்டுத்தான். அவர் சந்தோஷமாக இருந்தால் உன்னை நன்ருக வைத்துக்கொள்ள மாட்டாரா என்ற நப்பாசையினுல்தான், அவருக்கு அவ்வளவு பணிவிடைகள் செய்தேன். இன்று நீ கண்ட காட்சி, நான் கொஞ்சங்கூட எதிர்பாராமல் நடந்தது. காபி கொடுக்கத்தான் போனேன்; கையைப் பிடித்துவிட்டார். அக்கா! ஆண்களுக்கு அது வெகு சுலபம். அத்தான் என்ன, அதற்கு விதிவிலக்கா? என்னை நம்பு. நீ வாழவேண்டும்; உன்னை அவர் மகிழ்ச்சியோடு வைத்துக்கொள்ள வேண்டும்; என்பதுதான் என்றென்றும் எனது தீராத ஆசை" என்றுள் கமலம். இந்திரா வெறிச்சிட்ட பார்வையோடு சோர்ந்த நிலையில் உட்கார்ந்திருந்தாள். தண்ணீர் ஊற்றினுல் தழைத்து வளரும் கொடி, வெந்நீர் ஊற்றினுல் கருகிப் போகிறது. ஆனல், வெந்நீரும் நீர்தான்! அன்பு வார்த்தையில் துளிர்த்துத் தழைக்கும் குடும்பப் பெண்களின் இதயம், சுடுசொல்லில் தளர்ந்து கருகிப் போகிறது. சுடுசொல்லும் சொல்தான்!—இந்திரா, பாலனிடம் கேட்க விரும்பிய சொற்கள் தண்ணீர் போன்றவை. ஆனல் தன்னை அறியாமல் பாலன் உதிர்த்த பலவும் வெந்நீர் போன்றவை. இந்திரா கருகிய கொடியாகக் காட்சி தந்தாள். கமலம், அந்தக் கோரமான காட்சியைக் கண்டாள். அக்காள் வாழ்வு மறுபடியும்துளிர்விடாதா என்பதுதான் அந்தப் பேதைப் பெண்ணின் ஆசை. அதை நம்பவும் இந்திரா தயார்தான். ஆனல், பாலன் கமலத்தை விரும்புகிறுன்; இந்திராவுக்கு அது நன்ருகத் தெரிகிறது. இந்த நிலையில் கமலத்தின் களங்கமற்ற சுபாவம் எவ்வளவு தூரம் இந்திராவைக் கவரமுடியும்?

"கமலம், உன்னை நான் நம்புகிறேன். உன்னை என் தங்கையாகப் பெற்றது, கிடைக்கமுடியாத பாக்கியம் என்றே நான் நினைக்கிறேன். ஆனல்...அத்தான் உன்னை விரும்புகிறூர். நான் அவரை இனி திருப்திப்படுத்த முடியாது. வெறும் வாய் வார்த்தையைத் தவிர அவர் வேறு எதையும் இனி என்னிடம் விரும்பமாட்டார். வாலிப வயது. அவர்தான் என்ன செய்வார். கமலம்! நான் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன். அந்த முடிவை உன்னிடம் சொல்கிறேன். நீ பதில் சொல்லாதே! கலங்காதே! ஏன் என்று கேட்காதே! 'அக்காள் இட்ட ஆணை; ஏற்றுக் கொண்டோம்!' என்று ஏற்றுக் கொள். நீ சம்மதித்துவிட்டால் மற்றவர்களுக்கு சமாதானம் கூற என்னுல் முடியும்! இந்த ஏற்பாட்டை நான் விரும்புவதற்குக் காரணம், எனது சுயநலம்தான். அத்தான் என்னைவிட்டு வெகு தூரத்தில் விலகிவிடாமலிருப்பதற்குத்தான் நான் இந்த முடிவுக்கு வந்துள்ளேன். வாழ்க்கையின் வளமான சுகத்துக்கு வாய்ப்பு இனி இல்லை என்றுலும், நிழலில் இருக்கிறோம் என்ற நிம்மதி யாவது எனக்குத் தேவை. அதற்காகத்தான் இந்த முடிவுக்கு நான் வந்திருக்கிறேன்"- என்று அடிப்படைப் பேச்சையே அதிகம் பேசிய இந்திரா, விஷயத்திற்கு சீக்கிரம் வரமாட்டாள் போல் தோன்றிற்று. கமலம் திகைத்தபடி குறுக்கிட்டு, "என்ன சொல்கிறுய் அக்கா?" என்றுள்.

"நீ...நீ......அவரை மணந்து கொள்ளவேண்டும்!" என்று திக்கித்திணறிச் சொன்னுள், இந்திரா.

"அக்கா!" என்று அலறிய கமலம், இந்திராவின் தோளில் சாய்ந்து விம்மி அழ ஆரம்பித்தாள்.

"அழாதே கமலம்! ஏன் அழுகிறுய்? உம்......கண்ணீரைக் கடந்த பக்குவம் உனக்கு இன்னும் வரவில்லை. எனக்கு வந்துவிட்டது. கமலம்! இதை நான் வேண்டா வெறுப்பாகச் செய்வதாகக் கருதாதே! உண்மையிலேயே நான் இந்த ஏற்பாட்டை விரும்புகிறேன். நானே, பெருவியாதி பிடித்தவள்-திரும்பத் திரும்ப இதை ஏன் நான் சொல்கிறேன், தெரியுமா? அத்தானுக்கு என்மீது ஏற்படக்கூடிய அருவறுப்பு, எனக்கே என்மீது ஏற்படுகிறது. அதனுல்தான்!-இதை எவ்வளவு தான் ஒரு வயசுக்காரர் சகித்துக் கொண்டிருக்க முடியும்? இன்றில்லாவிட்டாலும் நாளை, பளபளப்பான ஒரு மேனியின் கவர்ச்சியில் அவர் விழுந்துவிட நியாயம் உண்டு. தாளமாட்டாத தாகம் எடுத்தால் நாற்றமெடுத்த தண்ணீரைக்கூட சுகாதார அதிகாரியே குடித்துவிடுவான்! தெரியாதா உனக்கு? நீ படித்தவள். படிக்காத எனக்குத் தெரிந்ததைவிட உனக்கு அதிகம் தெரியுமே! எண்ணிப் பார். அப்படி என் அத்தான் ஏதாவதொரு பெண்ணின் பின்னுலே போய்விட்டால் பிறகு என் நிலை என்ன? தாலியோடு தாய் வீட்டில் தங்கிவிடும் வாழா வெட்டிகளில் நானும் ஒருத்தி ஆகவேண்டும். படத்தைப் பார்த்து, "இவர் என் கணவர்" என்று மகிழ்வதைத் தவிர வேறு வழி இல்லாமல் போகும். அதைக் காட்டிலும், எனக்கென்று இல்லாவிட்டாலும் உனக்கென்ருவது அவர் நம் வீட்டோடு தொடர்பு கொண்டிருந்தால், நானும் அவரை அடிக்கடி பார்க்கச் சந்தர்ப்பம் கிடைக்குமல்லவா? அதனுல்தான் நான் இந்தக் காரியத்திற்குத் துணிந்தேன். வேறொருத்தி என் அத்தானை வசியப்படுத்திவிட்டால், பணிவிடை செய்ய எனக்கு வழி கிடைக்காது. நீயே அவர் மனைவி ஆகிவிட்டால், படுக்கை தட்டிப் போடுவதிலிருந்து பால் கொண்டுவந்து வைப்பதுவரை மனப்பூர்வமாக நானே செய்வேன்..." - இந்திரா நிறுத்தவில்லை. கமலம், அவள் வாயைப் பொத்தினுள். பொத்திய கையை எடுத்துவிட்டு, இந்திரா, கமலத்தின் தலையைக் கோதிக் கொடுத்தவாறு மேலும் பேசினுள்.

"வெட்கத்தைவிட்டு இவ்வளவையும் நான் சொல்கிறேனே-காரணம் என்ன? கமலம்! எனக்கு நிம்மதிவேண்டும் எனக்குக் கிடைக்காதது வேறொருத்திக்குக் கிடைக்குமென்ருல், அந்த வேறொருத்தி எனக்கு வேண்டியவளாக இருக்கவேண்டும். எனக்கு வேண்டியவர்கள் உன்னைத் தவிர வேறு யார் இருக்கமுடியும்! கண்ணு! நீ இனி எந்தப் பதிலும் சொல்லி என்னை மாற்ற முயற்சிக்காதே. நான் முடிவு செய்துகொண்டுதான் உன்னிடம் கையெழுத்துக்கு வந்திருக்கிறேன் அத்தான் அடிக்கடி ஒன்று சொல்வார். நம்நாட்டில் குமாஸ்தா செய்கிற முடிவில்தான் மந்திரி கையெழுத்துப் போடுகிறூராம். அது மந்திரி செய்கிற முடிவாகவே வெளி உலகத்திற்குத் தெரியுமாம்! என் தங்கமே ஒப்புக்கொள்.

மற்ற விஷயங்களை நான் சீக்கிரமே கவனிக்கிறேன்!'' என்று முடித்தாள் இந்திரா.

கமலம் பதில் சொல்லவில்லை. அழுதாள். அதையே பதிலாகத் தந்தாள். பத்து நாளைக்கு ஒரு முறையாவது அழவில்லை என்றால், அவள் பெண்ணே அல்ல! ஆம்; இந்த நாட்டில் கண்ணீர் விடுதல் அவர்களுக்கென ஒதுக்கப்பட்ட தொழில்!

''சொல், கமலம். இதில் யோசிப்பதற்கு என்ன இருக்கிறது. அழுவதற்குத் தான் என்ன அவசியம் ஏற்பட்டு விட்டது? ஊரிலே அக்காளும் தங்கையும் ஒருவரையே மணந்து வாழவில்லையா! இது என்ன அதிசயமா! அவர்களெல்லாம் சண்டை போட்டபடியே ஒரு கணவனோடு வாழ்கிறார்கள். நானும் நீயும் சந்தோஷமாகவே வாழ்வோம். பிறர் பார்த்துப் பொறுமைப்படக்கூடிய அளவுக்கு நம்முடைய வாழ்க்கையை நடத்துவோம். அத்தான் மிகவும் நல்லவர். எனக்கு மட்டும் இந்தப் பெருவியாதி வராமல் இருந்திருக்குமானால், அவர் என்னிடம் எவ்வளவு அன்பு செலுத்துவார் என்பது எனக்குத் தெரியும். அது முழுமையும் உனக்குக் கிடைப்பதில் எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி தெரியுமா?''-இந்திரா படபடவெனப் பேசினாள். தீர்க்கமான ஒரு முடிவைச் செய்து கொண்டு பேசத்தொடங்கினால், வார்த்தைகள்தான் எப்படி வந்து விழுகின்றன! அவளது இடைவிடாத பேச்சிலே கமலம் அசந்து போனாள். ''இனி அக்காளைத் திருப்திப் படுத்துவதென்பது அத்தானை மணப்பதுதான்'' என்று கமலம் எண்ணமிடும் அளவுக்கு இந்திராவின் 'வாதம்' போய் நின்றது.

''அக்காளுக்கு அமைதிவேண்டும், மகிழ்ச்சி வேண்டும். அது, அத்தானை நான் மணப்பதன் மூலம் கிடைக்குமென்று அக்காள் உறுதியாகச் சொல்கிறாள். சொல்கிற விதத்திலிருந்து பார்த்தால், நியாயந்தான் போலிருக்கிறது''-கமலம் இப்படி நினைக்கத் துவங்கினாள்.

''என்னதான், சொல்கிறாய், அக்கா!'' என்று திடீரென்று கேட்டாள் கமலம், இந்திராவைப் பார்த்து.

''அத்தானை, நீ மனப்பூர்வமாக மணந்துகொள்வதாக எனக்கு உறுதிகொடு'' என்றாள் இந்திரா.

தலைகுனிந்தபடியே, ''உன் விருப்பம் அதுவானால், நான் மறுக்கவா போகிறேன்?'' என்றாள் கமலம்.

இந்தப் பதிலைக் கேட்ட இந்திரா, சடக்கெனக் கமலத்தை அணைத்துக்கொண்டு பூரித்தாள். தன்னைச் சிரமித்துக்கொண்டு பிறருக்கு வாழ்வளித்துப் பூரிப்பதற்குத்தான் தியாகம் என்று பெயர். இந்திராவின் கண்களிலே ஆனந்தக்கண்ணீர் வடிந்தது. கமலத்தின் கண்களிலே - எந்த உணர்ச்சியில் பிறந்ததென்று தெரியாத கண்ணீர் பெருகிற்று.

அப்போது மெதுவாக, கள்ளனைப்போல் அந்தப் பக்கம் வந்து எட்டிப்பார்த்தான் பாலன். குற்றமுள்ள நெஞ்சு - அதன் தன்மையே அதிசயம்! ''என்ன பேசிக் கொள்கிறார்களோ? கமலம் இனித் தன்னிடம் எப்படி நடந்துகொள்வாளோ? இதை யாரிடமாவது-ஒருவேளை சுந்தரத்திடமே சொன்னாலும் சொல்லி விடுவார்களோ?'' என்றெல்லாம் பயந்தபடிதான் பாலன் அங்கேவந்து எட்டிப்பார்த்தான். அன்றிரவே ஏதாவதொரு சாக்குப்போக்குச் சொல்லி, சென்னைக்குப் புறப்பட்டுவிட வேண்டும் என்ற முடிவுக்கு அவன் வந்திருந்தான். கிணற்றடியில்நடந்துமுடிந்த 'சட்டசபை' ரகசியக் கூட்டத்தின் முடிவை அறிந்தவனல்ல, அவன்.

அவன் வந்து பார்த்தபோது இந்திராவும் கமலமும் ஒருவரையொருவர் அன்போடு அணைத்த நிலையில் காணப்பட்டார்கள். அதைப் பார்த்த பாலன், வேறொரு கணக்குக்கு வந்தான். இனி, தன்னோடு பேசவே கூடாது என்று இந்திரா கமலத்தைக் கேட்டதுபோலவும், கமலம் அதற்குச் சம்மதித்தது போலவும் அந்த மகிழ்ச்சியிலே தான் கமலத்தை இந்திரா கட்டி அணைத்து மகிழ்கிறாளென்றும் கணக்கிட்டான். அவன் இதயம் இந்த முடிவில் அவனைப் படாத பாடு படுத்திற்று. கண்டிப்பாக-யாரிடமும் சொல்லாமலேயே-அன்றிரவு சென்னைக்குச் சென்று விடுவது என்ற தீர்மானத்தை மறுபடியும் நிறைவேற்றிக் கொண்டு, தோட்டத்திலிருந்து திரும்பி மாடிக்கே சென்றுவிட்டான்.

கமலத்தின் சம்மதத்தைப் பெற்றுவிட்ட இந்திரா புது மலர்ச்சி பெற்றவளானாள். கமலத்திற்குத் தலைவாரிப் பின்னிவிட்டாள். மலர் வாங்கிச் சூட்டினாள். சாந்துப்பொட்டு வைத்து, கன்னத்தைத் தொட்டு அப்படியும் இப்படியும் திருப்பி அழகு பார்த்தாள். நீண்டநாட்களுக்குப் பிறகு, தங்கையைத் தன் கையாலேயே அலங்கரித்து மகிழ்ந்தாள். ''இந்த அழகை அவர் நன்றாக ரசிப்பார். இடைவிடாத முத்தங்கள் தருவார்'' என்று சொல்லவில்லை; நினைத்தாள். அவர் ரசிப்பார் என்பதிலேயே தான் பெருமைப்பட்டாள்.

கட்டிலறையில், முதலிரவில் அவர் தன்னைத் தொட்டதையும் குறும்புத்தனமாக நடந்துகொண்டதையும் அப்படியே கமலத்தோடு பொருத்திப் பார்த்தாள். ''அவரும் இவளும் ஒன்றாகத் தூங்கினால், அந்த அழகே தனிதான்'' என்று எண்ணிய எண்ணத்தைப் புன்னகையில் வெளியிட்டாள். அடிக்கடி அக்காளின் மலர்ந்த முகத்தையே கவனித்தாள் கமலம்.

திடீரென்று அங்கே பிரசன்னமாகி, இலை போட்டிருப்பதாகச் சங்கு ஊதினான் சமையற்காரன்.

''போய், அத்தானைச் சாப்பிடக் கூப்பிடு, கண்ணு!'' என்றாள், இந்திரா.

கமலம் தயங்கினாள். கைவளையலைச் சரி செய்தபடி தலைகுனிந்திருந்தாள். வளையலை அவள் தொட்டுக்கொண்டிருந்த காட்சி, ''காபி கொடுக்கப் போனபோது இந்தக் கையைத்தான் பிடித்தார். இப்போது மறுபடியும் போகச் சொல்கிறாயே!'' என்பது போலிருந்தது. இந்திரா அவள் முகத்தைத் தூக்கி, ''போடா கண்ணு! இனித்தான் நீ அவரது மனைவியாகப் போகிறாயே! அப்படியே வேடிக்கையாக விளையாடினால் தான் என்ன?'' என்றாள்.

கமலம் ஒரு பெருமூச்சோடு எழுந்து, மாடிப்படிகளில் ஏறினாள். தயங்கித் தயங்கி நின்றாள். அங்கேயும் தொடர்ந்து வந்த இந்திரா ''போம்மா'' என்றாள் பரிவோடு. கமலம், மாடி அறைக்கு வந்தாள். அங்கே, பாலன் உட்கார்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருந்தான். கதவுக்கு இந்தப் புறம் நின்றாள் கமலம். கமலத்தைக் கண்டதும் முகத்தைத் திருப்பிக்கொண்டான் பாலன். பள்ளிப்பருவத்தைக் கடந்தவனைக்கூடப் பிரம்பால் அடிக்கும் வாத்தியார், மனச்சாட்சி ஒன்றுதான்!

''சாப்பிட வாருங்கள்!'' என்றாள் கமலம்.

''பசியில்லை'' என்றான் பாலன்.

-அதற்குமேல் கமலம் அங்கே நிற்க விரும்பவில்லை. திரும்பினாள், இறங்குவதற்காக. அங்கே, மாடிப்படியிலேயே நின்றுகொண்டிருந்த இந்திரா, ''சும்மா கொஞ்சம் சாப்பிடலாம்; வாங்கன்னு கூப்பிடு'' என்று 'பாடம்' சொல்லித் தந்தாள். கமலமும் இந்திராவும் பேசுவது பாலனுக்குத் தெரியாதவாறு அந்த அறையின் அமைப்பு இருந்தது.

''சும்மா கொஞ்சம் சாப்பிடலாம் வாங்க'' என்று அதையே ஒப்பித்தது அந்தக் கிளி!

''வேண்டாம்!'' என்று ரத்தினச் சுருக்கமாகப் பதில் கொடுத்தான், அந்த எழுத்தாளன்.

கமலம் அக்காள் முகத்தைப் பார்த்தாள்.

''இங்கே கொண்டாரட்டுமான்னு கேளு!'' என்று சொல்லித் தந்தாள், மெதுவாக, இந்திரா.

''இங்கேகொண்டாரட்டுமா?'' என்று அப்படியே கேட்டாள் கமலம்.

பாலன் திகைத்தான் - என்ன இது! அதிசயம்! பயம் தெளிந்து விட்டதா?-அவனுக்குப் புரியவில்லை. அவன் குழப்பம் குழப்பமாகவே இருந்தது.

''வேண்டாம்!'' என்றான், அதற்கும்.

''இல்லே! கொண்டாரேன்னு சொல்லிவிட்டுவா!'' என்றாள் இந்திரா.

''கொண்டாரேன்!'' என்று சொல்லிவிட்டு இறங்கினாள், கமலம்.

—கீழே மங்கையர்க்கரசியும் சின்னப்பரும் ஓயாத பேச்சுப் பேசிக் கொண்டிருந்தார்கள். சுந்தரம் வெளியே போனவன் வீடு திரும்பவில்லை. கீழே இறங்கிய சகோதரிகளைப் பார்த்து, தாய், ''இந்திரா! சுந்தரம் வர நேரமானாலும் ஆகும். ஓம் புருஷனைச் சாப்பிடச் சொல்லு!'' என்றாள். ''இதோ! அதைத்தான் சொல்லிவிட்டு வருகிறோம்!'' என்று பதில் சொன்ன இந்திரா, கமலத்தை அழைத்துக்கொண்டு மறுகட்டிற்குச் சென்றுவிட்டாள்.

காலம்போன தம்பதிகள் வெற்றிலையோடு போர் புரிந்தபடி 'ஊர்க்கதை' பேசுவதைத் தொடர்ந்தனர்.

—சிறிதுநேரத்தில் கமலம் சாப்பாட்டுத்தட்டைக் கையில் ஏந்தியபடி முன்வர, அவளை முன்னால் தள்ளுகிற பாவனையில் பின்னாள் வந்தாள் இந்திரா. அதை கவனித்த மங்கையர்க்கரசி ''ஏம்மா! ஓம் புருஷன் எங்கயோ இப்ப எறங்கிப் போனாரே!'' என்றாள் இந்திராவைப் பார்த்து.

''வெளியில் போயிருப்பார்; வந்துவிடுவார்!'' என்றபடி, கமலத்தை அழைத்துக்கொண்டு சாப்பாட்டோடு மாடிக்குச் சென்றாள் இந்திரா.

—கீழே உட்கார்ந்திருந்த சின்னப்பர், மனைவியைப் பார்த்து, ''ஆமா! மாப்பிள்ளை போறபோது, எந்திரிக்காமை, மாடுமாதிரி உக்காந்திருக்கியே! மக்குக் கழுதை!'' என்றார் செல்லக் கோபத்தோடு.

''அது சரி வுடுங்க. புது மாப்பிளையா! பழைய மாப்பிளை தானே!'' என்று செல்லமாக பதில் சொல்லிவைத்தாள் மங்கையர்க்கரசி.

மாடியில் மேஜையைத்தட்டி, தரையைக் கூட்டி ஒழுங்குசெய்தாள் கமலம். இந்திரா அவளைப் பார்த்து, ''கண்ணு! அத்தானுக்கு நீ சோறு போடுறதை நா ஒளிஞ்சு நின்னு பாக்கப் போறேன். முந்தி மாதிரியே சிரிச்சிக்கிட்டு சோறு போடனும் கையைத் தொட்டுட்டாக்கூட சினுங்காதே!'' என்றாள்.

கமலம் தலையசைத்தாள், சம்மதத்திற்கு அறிகுறியாக.

''கல்யாணத்துக்கு அப்புறம் எப்படி இருப்பீங்கண்றதை இப்பவே பாத்துடனும்போல் இருக்குது. அவ்வளவு சந்தோஷமா சாப்பாடு போடனும்! தெரியுதா?'' என்றாள் இந்திரா.

கமலம் 'நிலநோக்கி' நின்றாள்.

திடீரென்று பலமான காற்றடிக்கத் துவங்கிற்று. சன்னல்கள் படபடவென அடித்தன.

''சாப்பாட்டைச் சரியா மூடு! தூசு விழும்'' எனறு சத்தமிட்டாள் இந்திரா.

மூடப்போன கமலத்தின் காலில், அந்த சூறைக்காற்று, மேசையிலிருந்த ஒரு கடிதத்தை சமர்ப்பித்தது. அதை சாதாரணமாகக் கருதி, சாப்பாட்டை மூடிய கமலம். அந்தக் கடிதத்தை எடுத்து மேசையின் மேல் மீண்டும், வைத்தாள். அதன் மேலே இருந்த ஒரு வரி பளிச்சென்று அவள் கண்களில் பட்டது.

'' இந்திராவுக்கு '' என்றிருந்தது அது.

''இதென்ன கடிதம்?'' என்று பிரித்துப் படித்த கமலம், ''அக்கா!'' என்று கத்தினாள். படிக்கத் தெரியாத இந்திரா, திடுக்கிட்டு ''என்ன!'' என்றபடி அவளருகில் வந்தாள்.

தொடரும்



# கேள்விப்பெட்டி

பன்மொழிப் புலவர், கா. அப்பாதுரை, எம். ஏ. எல். டி.

## பதில் தருகிறார்

அன்பினனி, கட்டிமேடு.

1. ஐந்தவித்தான் ஆற்றல் விசும்புளார் கோமான் இந்திரனே சாலும் கரி. (நீத்தார் பெருமை 25) என்ற பொய்யா மொழியின் புதுமைக்குறளுக்கு அறிவு மணம் தருக!

2. அயோத்தியை தசரதன் கோலோச்சும் காலத்தில் தமிழகத்தை ஆண்ட மன்னர்கள் யார்? நெறிகெட்ட இராமன் தமிழகத்திற்கு வரும்பொழுது (அதாவது வேதாரண்யக் காட்டிலிருந்து ஈழத்தைப்பார்த்ததாகக் கூறப்பட்டு அவன் பாதமும் இருக்கிறதாகக் கூறப்படுகிறது) அவனை வரவேற்ற மன்னன் யார்? வேதாரண்யத்திலிருந்து இலங்கைக்குப் பாதை காணமுயன்றதைப் பற்றி வால்மீகி இராமாயணத்தில் கூறப்பட்டிருக்கிறதா? அல்லது கம்பனின் தனிப்புழுகா? விளக்கம் தேவை.

1. இக்குறளுக்கு பேராசிரியர் வரதராசனார் அவர்கள் தெளிவுரை:—

ஐந்து புலன்களாலாகும் ஆசைகளை ஒழித்தவனுடைய வல்லமைக்கு, வானுலகத்தாரின் தலைவனாகிய இந்திரனே போதுமான சான்று ஆவான் என்பது. இதில் ஐந்தவித்தான், இந்திரன் ஆகிய இரண்டு தொடர்புகளுக்குமே அடிப்படை பொருள் வேறுபாடுகள் காண்கிறோம். ''இந்திரனே சாலும் கரி'' என்பதற்குப் பரிமேலழகர் 'அகன்ற வானத்துள்ளார் இறைவனாகிய இந்திரனே அமையும் சான்று' என்று பொருள் கூறி, 'தான் ஐந்தவியாது சாபம் எய்தி நின்று அவித்தவனது ஆற்றல் உணர்த்தினான் ஆகலின்' என்று விளக்கம் கூறுகிறார். இங்கே தன் புலனை அடக்காது அகலிகைமீது மோகமுற்று இந்திரன் சாபம் அடைந்த கதையை பரிமேலழகர் குறிக்கிறார். இந்திரன் சான்று என்பதை இந்திரன் கதை தரும் எச்சரிக்கை அல்லது எதிர்மறை சான்று என்று அவர் கூறுகிறார்.

மனக்குடவர் இத்தொடருக்கு, 'அகன்ற விசும்பிலுள்ளாருக்கு நாயகனாகிய இந்திரனே அமையும் சான்று' என்று பொருள் கூறி, 'இந்திரன் சான்று என்றது, இவ்வுலகின்கண் மிகத் தவஞ்செய்வார் யுளரானார் அவன் தன் பதம் இழக்கின்றானாக நடுங்குமாதலான்' என்று விளக்குகிறார். இங்கே இந்திரன் அதே தேவர்களின் அரசனானாலும், அவன் சான்றாகும் வகை மாறுபடுகிறது. இங்கும் சான்று எதிர்மறை சான்றுதான்; மிகுந்த தவஞ் செய்தவர் இந்திரன் பதவி பெறுவர். இந்திரன் அதனால் பதவி இழக்க நேரும். அவன் இதற்காக அஞ்சுவான். அந்த அச்சமே ஐந்தவித்தான் ஆற்றலுக்கு சான்று என்று மனக்குடவர் கொள்கிறார்.

புலவர் குழந்தை இத்தொடருக்கு 'அகன்ற வானுலகத்தாருக்கு தலைவனாகிய இந்திரன் வரலாறே தக்க சான்றாகும்' என்று பொருள் கூறுகிறார். ஆனால் அவர் கொள்ளும் புராணக்கதை முற்றிலும் வேறு. 'வரையா ஈகையால் பெரும் புகழோடு வாழ்ந்த மாவலி (மகாபலிச் சக்கரவர்த்தி) என்னும் தமிழரசனை, வாமனன் என்பானைக் கொண்டு கொல்வித்தவன் (இந்திரன்.)

...தமிழ் மக்களின் கொடை, புகழ் போன்ற பெருமைக்கே பொறாமைப்படுகிற இந்திரன், ஒழுக்கத்தை நீத்து ஐந்தவித்தார் பெருமைக்கு என் படான்? என நீத்தார் பெருமையை விளக்கிய வாறு' என்று குழந்தை ஆராய்ச்சி செல்லுகிறது. 'அயல் நாட்டார் பொறாமை கொள்ளக் கூடிய அவ்வளவு பெருமையுடையவர் (தமிழ்ப் பெரியார்கள்) என்பதாம்' என்ற அவர் முடிவு இந்திரனை அவர் அயல்நாட்டவர் ஆகிய ஆரியரின் அரசர் என்றோ, தெய்வம் என்றோ கருதுகிறார் என்று காட்டுகிறது.

புலவர் குழந்தையின் விளக்கத்திலும் சான்று எதிர்மறை சான்றாகவே கொள்ளப்படுகிறது.

''ஐந்தவித்தான்'' என்பதற்கு பெரும்பாலான உரைகள் பழமை, புதுமையாகிய இரு சார்பிலுமே ஐம்பொறிகளையும் அடக்கினவன், ஆசையற்றவன் என்றே பொருள் கொள்கின்றன. திருவள்ளுவர் பொறி அடக்கம், அவாவடக்கம் ஆகியவற்றை எல்லா அறிவு நூலாரையும்போலவே உயர்வுபட பாராட்டியுள்ளார் என்பது உண்மை. ஆனால் தவம், துறவறம், கடவுள் ஆகிய சொற்களையெல்லாம் ஆரியர், அன்பிலாத உயர்வு, தாழ்வுடைய வருணாசிரம நெறிக்கு இசையத் திரித்துக் கொண்டுள்ளார்கள். அவற்றின் தமிழ்ப்பொருளை, திருவள்ளுவர் உட்பொருளை முதன் முதல் சுட்டிக் காட்டியவர் தமிழ்ப்பெரியார் திரு. வி. கல்யாணசுந்தரனார் அவர்களே. ''துறவு'' என்பதை தன்னலம் துறப்பு என்றும், ''தவம்'' என்பதை தன்னலத் தியாகம் என்றும் வள்ளுவர் அன்பறம் தெரிந்து திரு வி. க. விளக்கியதை மற்றச் சைவ அன்பர்கள் கவனியா விட்டாலும் பகுத்தறிவு கவிஞராகிய பாரதிதாசன் தெரிந்து மீண்டும் வலியுறுத்தி வருகிறார். அம்மரபில் ஐந்தவித்தான் என்பது ஐந்து பொறிகளையும் தன்னல சிற்றின்பங்களிலிருந்து விலக்கி பொதுநலப் பேரின்பத்திற்குப் பயன்படுத்துபவர் என்று பொருள் கொள்ளுவதே சிறப்பு ஆகும்.

இந்திரன் இந்திய ஆரியர்கள் மட்டுமே வணங்கிய தெய்வம். கிரேக்கர், உரோமர், ஜெர்மானியர் ஆகிய மற்ற ஆரிய பழங்குடியினர் அறியாத தெய்வம். ருக்குவேதத்திலேயே ஆரியர் அத்தெய்வத்தை பாஞ்சாலம் அல்லது ஐந்துநாட்டுப் பழங்குடிகளின் தெய்வமென்றே குறித்துள்ளனர். தெய்வத்தைத் தன் தெய்வமாக்கியபின், ஆரியர் அத்தெய்வத்தைப் பற்றிய பழங் கருத்துக்களுடன் தங்கள் தெய்வங்களின் புதுக்கதைகளையும் ஒட்ட வைத்தனர், அகலிகைக் கதை அத்தகைய ஒரு புது ஆரியக் கதையாகும்.

இந்திரனைப்பற்றி வைதிக ஆரிய புராணங்கள் மட்டுமின்றி புத்த சமண காவியங்களும் பேசுகின்றன. புத்த சமண காவியங்களுள் இந்திரன் ஒரு தெய்வமல்ல. வித்தியாதரர் என்ற தமிழினம் சார்ந்த ஒரு நாகரிக மக்களின் அரசன். அவன் தவத்தில் வல்லவன். அதன் ஆற்றலால் அருஞ்செயல்கள் செய்து நீடித்த காலம் ஆண்டவன்,

''தொல்காப்பியத்தாலும்'' மருத நிலத்தெய்வம் வேந்தன் என்று கூறப்பட்டிருக்கிறது.

ஆகவே, தன்னலம் அடக்கி பொதுநலத்துக்காக அரும்பாடு பட்டுப் பெருமை அடைந்த தெய்வப் பெரியார்களுள் ஒருவனாக இந்திரன் தமிழினத்தாரால் போற்றப் பட்டார் என்று கருதலாம். ஐந்து அடக்கிய பொதுநலப் பெருமைக்கு, அவன் மரபை திருவள்ளுவர் நேரடிச் சான்றாகவே கூறினார் எனலாம்.

2. இராமாயணக் கதையை உண்மையான வரலாறு என்று கொள்வோரும் உண்டு. புராணங்களைப் போல, முழுப்புனைகதை என்று கொள்வோரும் உண்டு. வரலாற்றுடன் இணைந்த புனைகதை என்று கொள்வோரும் உண்டு. ஆகவே, அது உண்மை என்ற அடிப்படையில் கேள்வி கேட்போருக்கு எளிதில் மறுமொழி கூறமுடியாது. இராமன் தமிகத்திற்கு வரும்போது; தமிழகத்திலிருந்த மன்னன் யார்? என்ற கேள்வி இத்தகையது.

இராமாயணத்தில் கம்பனின் தனிப்புளுகுகள் பல இருக்கலாம். ஆனால் தமிழகம் பற்றிய கூற்றுகள் பல வால்மீகி இராமாயணத்திலேயே இருக்கின்றன. சிறப்பாக பாண்டிநாடு, அதன் தலைநகராகிய கபாடபுரம்; அங்குள்ள முத்துக்கள் ஆகியவை வால்மீகியால் சிறப்பித்துக் கூறப்பட்டிருக்கின்றன.

இராமாயண ஆராய்ச்சி செய்தவருள் மிகப் பெரும்பாலானோர்-ஆதரவாக ஆராய்ச்சி செய்தவரும், எதிர்ப்பாக ஆராய்ச்சி செய்தவரும். ஆரியச் சார்பாக ஆராய்ச்சி செய்தவரும்-தமிழ் திராவிடச் சார்பாக ஆராய்ச்சி செய்தவரும்-கிட்டத்தட்ட எல்லாருமே அதை ஆரியக்கதை என்றுதான் கொண்டுள்ளனர். அதைப் போலவே முதன் முதல் அக்கதையை எழுதியவர் வால்மீகி என்றும், முதன் முதலில் எழுதப் பட்ட மொழி சமஸ்கிருதம் என்றும் பொதுவாக அறிஞர் உலகால்கூட நம்பப்படுகிறது.

ஆனால் சமஸ்கிருத மொழிக்கும் சமஸ்கிருத வால்மீகிக்கும் நெடுங் காலத்திற்கு முற்பட்டே பாரத இராமாயணக் கதைகள் புத்தர்களின் பாளிமொழி ஜாதகக்கதைகளிலும், சமணர்களின் பிராகிருதக் கதைகளிலும் பல வடிவங்களில் கூறப்படுகின்றன. வேத காலங்களில்கூட இராமாயணக் கதை வழங்கியிருந்ததாக வேத மொழி ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். தவிர, வால்மீகி இராமாயணத்திலேயே முதல் இராமாயணம் இயற்றிய மற்றொரு வால்மீகி அல்லது மற்றொரு கவிஞனின் கதை கூறப்படுகிறது. கதையுடன் அவன் பாடிய முதல் பாட்டு ஒன்றும் தரப்படுகிறது. அந்த ஆதிக் கவியின் பாட்டு, மொழி, பண்பு ஆகியவற்றிற்கும் சமஸ்கிருத வால்மீகி, சமஸ்கிருதம், சமஸ்கிருத வால்மீகி இராமாயணத்தின் பண்பு ஆகியவற்றிற்கும் மலை மடுவான வேற்றுமை உண்டு என்று சமஸ்கிருத ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

தற்கால இராமாயண பாரதங்கள் புகழடையு முன்பு இந்தியாவில் வழங்கிய தொல்பழம் பெரும் காப்பியம் பெருங்கதை. அதை எழுதியவன் ஆதி கவி என்றும், சுக்கிரன் என்றும் அசுரர்களின் குரு என்றும் குறிக்கப்படும் குணாட்டியன். அவன் எழுதிய மொழி சமஸ்கிருதத்துக்கு முன்பே, இலக்கிய இலக்கண வளத்துடன் விந்தியமலைப் பக்கம் வழங்கிய பிசாசு மொழி எனப்படும் மொழியாகும். இந்தப் பெருங்கதையில் ஏழு லட்சம் பாடல்கள் அடங்கிய ஏழு காண்டங்களில் இராமாயணம் ஒரு காண்டத்தின் கதை என்று கேள்விப்படுகிறோம்,

சென்ற திங்களில் காலம் சென்ற திருத்தந்தை கிராஸ் பண்டைத் திராவிட நாகரிகத்தையும்; அதனோடு தொடர்புடைய மாண்ட நெடுநிலக்கடல் நாகரிகங்களையும் பரக்க ஆராய்ந்த பெரியாராவார். அவர் புராணங்களும்; இராமாயண பாரதங்களும் ஆரியர் வருவதற்கு பல ஆயிர ஆண்டுகளுக்கு முன்பே திராவிட மக்களின் மக்கட் கதைச் செல்வங்களாயிருந்தன என்றும் தம் கைவசப்பட்ட திராவிட அறிஞர் உதவிகொண்டே அவற்றை ஒரு புறம் அழித்தும் சிதைத்தும் இன்னொருபுறம் அதைத் தமக்கேற்றபடி மாற்றியும் வந்துள்ளனர் என்று கருதுகிறார்.

கம்பன் புழுகுகளில் சிலவாவது வால்மீகிக்கும், சமஸ்கிருதத்துக்கும், ஆரியர்களுக்கும் முற்பட்ட முற்கால இராமாயணம் மரபுகளை தமிழக வழக்கிலிருந்து எடுத்து மேற்கொள்ளப்பட்டன ஆகலாம். கட்டாயமாக இராவணன் கையிலை தூக்கியது, திரிசடைவண்டார் குழலி கற்பு மரபு, திரிசடை கட்டிய வரலாறு, வாலி அவன் மனைவி பற்றிய செய்திகள் முதலியன சமஸ்கிருத மரபில் காணாத் தமிழ் மரபுகளாகும். இராவணன் பெரிய இசைப்புலவன் என்பது புராணச் சான்றிலும், சங்க மரபுச்சான்றிலும் காணப்படுகிறது. இராவணனைப் பற்றிய இந்த உயர்ந்த மரபுகளைக் கருதியே வால்மீகிக்குப் பின்னிருந்த யாரோ, இராவணன் குலப்பெருமை முதலியவற்றை இராமாயணத்தில் பின் சேர்க்கையாக உத்தரகாண்டம் என்று எழுதிச் சேர்த்தனர்.


## கிளி பறந்தது

ஆசிரியர் : நாகமுத்தையா

'விறுவிறுப்பான கதை, வெள்ளத் தமிழ் ஓட்டம், வியப்புத் தரும் முடிவு, விரும்பிப் படிக்கத் தூண்டும் நடை' இவற்றோடு கூடிய நாவல் இது.

விலை ரூபாய் ஒன்று.

கிடைக்குமிடங்கள் :

பிரேமாப் பிரசுரம், கோடம்பாக்கம், சென்னை-24.

பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை-1.

நீலா நிலையம், சென்னை-6.

## கடவுள் வேடம் கலைகிறது

— 2-ம் பக்கத் தொடர்ச்சி —

களிப்பூட்டியது. ராமன் சென்று மறைந்து போனுன். கோதையும் அவள் கணவனும் உட்சென்றனர். 'கடிப்பயல் ராமனை இன்னும் கண்டு பிடிக்க முடியவில்லையே' என்ற வேதனை அவனை அலட்டியது.

### 'தென்னிலங்கை'

சூட்சமமும் புத்தி தீட்சண்யமும் மிகுந்த கோதையின் கணவன் வெளியூர் செல்வதாக நடித்தான். ராமன் அவசர அவசரமாக கோதையைத் தேடி ஓடிவந்தான். அவள் காதல் போதையோடு அவனுக்காக காத்திருந்தாள். நீண்ட நாட்களாக சந்திக்காமலிருந்த காதலர்கள் இன்ப வெறியோடு தழுவிக் கொண்டனர்.

"கோதை! உன்னைப் பிரிந்து இருந்த இத்தனை நாட்களும்-அப்பப்பா...அதன் வேதனை சொல்லித் தீராது. என் அன்பே! உன் மேனி வாடிவிட்டிருக்கிறதே...!" என்று ஆசை ததும்ப பேசினுன் ராமன்.

"ஆமாம் ராமா! உன்னைக் காணுமல் என் மனம் பட்ட வேதனை... என்னவென்று சொல்வேன்? என்ஞல் வர முடியாது - நீயாவது வந்தாயே...!" என்ருள் கோதை.

"இன்பமே! இனியும் என்ஞல் தாங்கிக்கொள்ள முடியாது. எத்தனை நாட்களுக்கு இந்த கள்ளச் சந்திப்பு? சண்காணு லோகத்திற்குச் சென்று விடுவோம். கோதை! மனித சஞ்சாரமே இல்லாத பூமிக்குச் சென்று விடுவோம்! இப்பொழுதே—உன் கணவன் வருவதற்கு முன்பே புறப்பட்டு விடுவோம்! கோதை, சம்மதம் தானே!" ராமனின் சொற்களில் ஆர்வம் துடித்தது.

"ராமா! எங்கே செல்வது? மனித சஞ்சாரமே இல்லாத இடம் எங்கிருக்கிறது, ராமா? வான வெளியிலே வீடு கட்டி வாழலாம்; இல்லையென்ருல் கடலுக்கடியில் மாடி கட்டி வாழலாம்...! வேறு எங்கு சென்ருலும் என் கணவனின் கண்களிலிருந்து கரையேற முடியாது, ராமா!" கோதையின் பேச்சில் பயமும் பரிதாபமும் பின்னிக் கிடந்தது.

"தெற்கே செல்வோம்! தென்னிலங்கை வேந்தன் ராவணன் ராஜ்யத்திற்குச் சென்றுவிடுவோம். அங்கே உன் கணவன் வர முடியாது. ஏன் ஜனகன்கூட வர முடியாது! இந்த வாடை நிறைந்த வடக்கத்திய வாழ்வே இனி நமக்கு வேண்டாம், கோதை!" என்ருன் ராமன்.

"தென்னிலங்கையிலே மதுகிடைக்குமா, ராமா? மிதிலையைப் போன்று மங்கையர் மது குடித்து தன்னிச்சையாக ஆடிப்பாட அனுமதியுண்டா அங்கே?" அவள் தன் இன்ப கேளிக்கைகளுக்கு வாய்ப்பு உண்டா என்று உசாவினுள்.

"தென்னகத்திலே இன்பத் தேனுண்டு! மதியை மயக்கும் மதுவும் உண்டு! ஆனுல், அயோத்தி, மிதிலையைப்போன்று மங்கையர் மதுவருந்தி ஆர்ப்பாட்டம் செய்யமுடியாது. கட்டுப்பாடும் கண்ணியமும் கன்னியரின் அணிகலன்கள். அதைப் பற்றி எல்லாம் இப்பொழுது ஏன் சிந்தனை? கோதை! காலம் வேகமாக ஓடுகிறது. நாமும் புறப்படுவோம்!" என்று அவளை அன்போடு அணைத்தபடி அழைத்தான்.

"அன்பரே! பொருமை பெருமையை தேடித்தரும் இன்னும் ஒரு நாள் சகவாசம் தாருங்கள். நாளைக்கு எங்கேனும் சென்றுவிடுவோம்!" என்ருள் கோதை.

"சரி கண்ணே! இன்று சகுனம் கூட சரியில்லை. நாளையே செல்வோம். நான் 'சென்று வரட்டுமா?'" என்று பிரியா விடைபெற்ருன்.

"சென்று வாருங்கள்...!" கோதையின் குரலில் ஏனே சங்கடம் இருந்தது.

### 'அவ(ன்) மானம்'

கவலை அவள் உள்ளத்தைக் கொள்ளையடித்தது. கலிதீரக் கள்ளுண்டாள். வெறிமயக்கத்தில் தள்ளாடினுள். தென்றலின் கதகதப்பு கோதையை இன்பவாதனைக்கு இலக்காக்கிற்று. இரவின் அந்தகாரம் அவள் மேனியையும் மனதையும் காம வேதனையில் மூழ்கடித்தது. கோதை போதை வெறியோடு படுக்கையில் புரண்டு கொண்டிருந்தாள். அவள் கணவன் எங்கிருந்தோ கள்வெறியோடு வந்தான். அவளை வேட்கை புணர்ச்சியோடு தொட்டு உலுப்பினுன். மோகத்தில் மூழ்கியிருந்த அவள் அவனை ஆர்வத்தோடு அணைத்துக்கொண்டாள். இன்பம் அவர்களிடம் துன்பம் அனுபவித்தது.

வைகறையின் துயில் நீக்கம் எங்கும் தெரிந்தது. கோதையின் வாய் மென்மையாக 'ராமா, ராமா' என்று ஒலித்தது. முகத்தை இன்பத்திரை மூடியிருந்தது. தூக்கத்திலும் இதழோரங்களில் புன்முறுவல் பூத்துக்கிடந்தது. சிவந்த ரோஜாக்கள் அவள் கன்னங்களை தழுவியபடியிருந்தன. அழகு மேனி பொங்கிக்கொண்டிருந்தது. இரவெல்லாம் அருகிலிருந்த அவள் கணவனை அப்போது காணேம்.

சேவல் ஒன்று கூவியது. கோதையின் கணவன் மிகமிக பயங்கரத் தோற்றத்துடன் - கையில் ஒருதலையுடன் அறையினுள் நுழைந்தான். அப்போதும் அந்த அழகி இன்பச் சுழிப்போடுதான் துயின்று கொண்டிருந்தாள்.

"அடி கோதை!" அவள் கணவனின் குரலில் தொனித்த ஆவேசம் அந்த வீட்டையே அலறச் செய்தது. பூகம்பத்தால் அதிர்ச்சியுற்றவளைப் போல, கோதை திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தாள். அவளுடைய கண்ணிமைகள் படபடவென்று அடித்துக் கொண்டன. அவள் இதயமும் அப்படித்தான் துடித்தது. தன் கணவனையும் அவன் கையிலுள்ள தலையையும் பார்த்தாள். உள்ளம் அதிர்ந்தது! உடல் அதிர்ந்தது! அவள் தன்னையும் மறந்து 'ஆ'வென்று அலறிப் படுக்கையில் சாய்ந்தாள்.

அவள் கைகள் முறிந்துவிடும் போலிருந்தது. உடலே அதிர்ந்து அலண்டது. கோதையின் கணவன் தன் கொடூரத்தைப் பிரயோகித்துத்தான் அவளைக் கைபிடித்து அப்படி இழுத்தான். அவள் மயக்கம் தெளிந்து எழுந்தாள். முண்டமில்லாத தலை. அதைக் கையில் தாங்கியிருக்கும் அவள் கணவன்! அவளை பயம் பிடித்தாட்டியது.

"ஆமாம்....! இது......இது......! யாருடைய தலை?" கோதை தன்னைச் சமாளித்துக் கொண்டுதான் இக் கேள்வியைக் கேட்டாள்.

"என்னடி கள்ளி? பத்தினி வேஷமா போடுறே? இவன்தானடி உன் கள்ளக்காதலன் இராமன்! ஒன்றும் தெரியாதவளைப் போன்று பசப்புகிருயே...!" அவன் சீறினுன்.

கோதையின் கூந்தல் சரிந்து கிடந்தது, நெற்றித்திலகம் கலைந்து கிடந்தது. கண்களில் தழல் நிழலிருந்து வெடித்துச் சிதறியது. அந்தச் சிரிப்பு அவன் கணவனையே கலங்கச் செய்தது.

"இவன் ராமஞ? என் கள்ளக் காதலஞ? நான் பசப்புகிறேஞ? உனக்கென்ன பைத்தியமா?" கோதை கொடூரமாகச் சிரித்தாள்.

"தூக்கத்தில் எல்லாம் 'ராமா, ராமா' என்று பிதற்றுகிருய்? விழித்துக்கொண்டதும் பசப்புகிருயே! யாரையடி ஏய்க்கிருய்?" என்று அதட்டினுன் அவன்.

பயங்கரச் சிரிப்புச் சிரித்தாள் கோதை. அவள் நிலையே அப்போது அப்படித் தானிருந்தது. "அட பைத்தியமே! இவனை நினைத்துக்கொண்டா 'ராமா, ராமா' என்று பிதற்றினேன்? அட பாவமே! ஒன்றும் அறியாத இந்த வாலிபனின் உயிரைக் குடித்து விட்டீரே...!" என்று வரட்டுச் சிரிப்புச் சிரித்தாள்.

"இந்த ராமனை இல்லாமல் வேறு எவனையடி எண்ணி பிதற்றினுய்? சொல்லடி சிறுக்கி!" அவன் சினத்தின் சிகரத்திலிருந்து கேட்டான்.

"என் கனவிலும் நினைவிலும் உலவும் ராமன் - உங்க ஜனகர் மகள் ஜானகியை திருமணம் செய்து கொள்ளப்போகும் தசரத குமாரன் தான்! சென்ற கிழமை மிதிலை தெருக்களில் உலா வந்தாரே அயோத்தி அரசகுமாரன், அந்த அழகு ராமனை நினைத்துத்தான் வாய்—வாய் பிதற்றினேன்...! அதற்கு இந்த இளைஞனின் தலையையா நீர் பலி கொள்ளவேண்டும்? அட அக்கிரமமே..." அவள் வார்த்தைகளில் வன்மை கருவியது.

அவமானம் அவனைப் பிடுங்கித் தின்றது. அவன் மானம் அவனைக் குத்திக் குடைந்தது. தரையில் 'தடால்' என்று சாய்ந்தான் தலை கையை விட்டு ஒரு மூலையில் சென்று விழுந்தது. கோதை முண்டமில்லாத தலையை எடுத்துத் தன் முகத்தோடு ஒற்றிக்கொண்டாள்.

—"எழில்"

ஏப்ரல் 12-ம் தேதியன்று எங்கும் கிடைக்கும்!

# மதுரைவீரன்

கண்ணதாசன்
— எழுதியது —

—இலக்கியச் சுவையும் வீரச்சுவையும் காதல் நயமும் பின்னிக் கிடக்கும் வசனங்கள்—
—பிழையின்றி அப்படியே தரும் பதிப்பு—
—மேடையில் நடிக்கப் பயன்படும் காட்சி அமைப்பு—

எச்சரிக்கை: [போலிப் புத்தக வியாபாரிகள் தப்பும் தவறுமாக அச்சிட்டு, வழக்கம்போல் திருட்டுத்தனமாக விற்பனை செய்வது சட்டப்படி கடும் நடவடிக்கை எடுக்க ஏதுவாகும். நண்பர்கள் கீழ்க்காணும் பதிப்பகத்தின் பதிப்பையே வாங்கக் கோருகிறேம்.]

பிரதி விலை அணு 8.

வியாபாரிகளுக்கு 40 சதவீதம் கழிவு தரப்படும்.

வேண்டும் பிரதிகளுக்கு முன்பணத்தோடு எழுதுக:

—கண்ணதாசன் பதிப்பகம்—

33, மானகிரி பழனியப்ப செட்டியார் தெரு,
நா. புதூர்,
காரைக்குடி : : இராமநாதபுரம் மாவட்டம்.

"வாய்வு சூரணம்"

உஷ்ண வாய்வு, முழங்கால் வாய்வு. இடுப்பு வாய்வு, பித்த வாய்வு, மலக்கட்டு, மலபந்தம், அஜீரணம், புளியேப்பம், கைகால் அசதி, பசியின்மை, சேறியாமை, வயிற்றுவலி, பித்த மயக்கம், பித்த சூலை, சோம்பல் முதலான வாய்வு ரோகங்களை அறவே நீக்கி நல்ல பசி எடுப்பதற்கும், தேகாரோக்கியத்துக்கும் மிகச் சிறந்த சூரணம். மூலிகைகளினுல் தயாரிக்கப் பெற்றது.

5 பலம் டின் 1-க்கு ரூ. 3-0-0

தேவைக்கு :-

சம்பு இண்டஸ்ட்ரீஸ்,
அரிசிப்பாளையம், சேலம்-2.

மன்மத கோலாகல குளிகை:
காமகேசரி லேகியம்

ஒரே குளிகையில் நீங்கள் என்றும் அடையாத இல்லற சுகம் அடைவீர்கள். தாதுபுஷ்டி, இரத்த விருத்தி தரும். அபார சக்தி வாய்ந்தது. 100 குளிகை ரூ. 10. லேகியம் ரூ. 5.

சூதகசஞ்சீவி எண்ணெய்

ஸ்திரீகளுக்கு ஏற்படும் சூதக சம்பந்தமான 16 வித கொடிய குற்றங்களையும் நீக்கி புத்திர சந்தானத்தைக் கொடுக்கும். புட்டி ரூ. 5. பூரண குணத்திற்கு 3 புட்டிகள் விலை ரூ. 12.

ஸ்டாக்கிஸ்டுகள்:

பாரடைஸ் ஏஜன்ஸி,
59, அஷ்டபுஜம் ரோடு,
சென்னை - 7.



# தங்கக் கிளியே...தாய்மாமன் பெத்த கண்ணே!

— 1-ம் பக்கத் தொடர்ச்சி —

"பூவாடை தோணுதடீ
புதுக்காத்து வீசுதடீ
பாவாடை கட்டையிலே
பழகியதை ஏன் மறந்தாய்?

—அவள் மறக்கவில்லை. ஆகவே, மறந்து விட்டதாக அவன் சொன்னதற்குப் பதில் சொல்லியாக வேண்டும். சொல்லுகிருள், அந்தப் பட்டிக்காட்டுப் பாவாணி.

...ஆரும் மறக்கவில்லே
ஆள் மாத்த எண்ணமில்லே
ஊரார் முடிச்ச கதை
உன்முடிவைத் தேடுதடா!"

—"இங்கே யாரும் மறந்துவிடவில்லை. ஆளை மாற்றவும் நான் விரும்பவில்லை. ஊரார் உனக்கும் எனக்கும் உறவு என்றே கதையை முடித்துவிட்டார்கள். உன் முடிவுதான் இன்னும் தெரியவில்லை."—அந்தக் காட்டுப் பலாப்பழம் இந்தப் பாட்டைப் பாடியதும் கேட்ட மச்சானின் கால்களிலே ஆட்டம் அதிகமாகிறது. படபடவென நடக்க, தண்ணீர் மடமடவென இரைக்கப்படுகிறது. பாட்டை நிறுத்தினுல் பாவை போய் விடுவாளோ என்று பயப்படுகிருன், தொடருகிருன்:

"பொங்கி வரும் தண்ணியிலே
போகம் விளையட்டும்
தங்கமஞ்சள் நூலெடுத்து
கரம்கோர்த்துக் கட்டிடுவேன்"

—"அடி அஞ்சனக்கண்ணி, வயலிலிருந்து ஒரு போகம் விளைந்துவரட்டும்; வசதி வரும்; பிறகு மணம் முடிப்பேன்." என்று ஒரு பொருளும், போகம் விளையட்டும் என்றதன்மூலம், திருமணத்திற்கு முன்னுலே இன்ப விளையாட்டிற்கழைக்கும் மறுபொருளும் இதிலே அடக்கம். புரிந்துகொள்ள நேரம் பிடிக்கவில்லை அந்தப் புகையிலைவாய்ப் பூங்கோதைக்கு:

"போகம் விளைஞ்சுவிட்டா
பொட்டைக் காடென்பாயே
மேகம் குவிஞ்சுவரும்
வேறென்றைக் கேட்பாயே!"

—என்று இரு பொருள் படவே பதில் சொல்கிருள். "உனக்கு நான் இணங்கிவிட்டால் கற்புச் செழிப்பில்லாத பொட்டைக்காடு என் மனம் என்று கருதிவிடுவாயே, மேகத்தின் நீரோட்டமிக்க வேறென்றைக் கேட்பாயே" என்றொரு பொருளும், "அறுவடைக்குப் பிறகு திருமணம்" என்கிருய் இப்போது! "அடுத்தொரு மழை பெய்யட்டும், பார்ப்போம்" என்று ஏன் சொல்ல மாட்டாய் அப்புறம்" என்று மறுபொருளும் இதிலே அடக்கம்.

அந்த வேப்பெண்ணைக் குழலாள் அங்கேயே நின்று இப்படிப் பாடப்பாட, அந்த எளிய பாடலின் இனிய சுவையிலே மச்சான் ஏற்றத்தின்மீது ஓட ஓட, உற்சாகம் பெருக, ஓடுகின்ற தண்ணீர் உற்பத்தியை வளர்க்கின்றது.

ஈழநாட்டிலே ஒரு எளிய பாடலைப் பார்ப்போம். பெண்கள் களை எடுத்துக் கொண்டிருக்கிருர்கள். தோளிலே மண்வெட்டியோடு வரப்பிலே நடந்து போகிருன் ஒரு இளம் உழவன். களையெடுக்கும் பெண்களுக்கு நடுவில் சிலை எடுத்து விட்டது போல் நிற்கிருள் அவன் காதலி. மச்சானைக் கண்டுவிட்டாள்; வச்ச கண்ணை வாங்கவில்லை. மச்சானும் பார்த்துவிட்டான்; வழி நடக்க எண்ணமில்லை. பாடுகிருன்:

"தங்கக் கிளியே யென்
தாய்மாமன் பெத்த கண்ணே
மையிட்ட பொற்சரமே-உன்னை
மறந்திருக்கக் கூடுதில்லை.

கடிதம் வரக் காட்டவோ
கதைத்திருக்க நான் வரட்டோ
தூதும் அனுப்பட்டோ
சொல்கிளியே சம்மதத்தை"

—பாடிவிட்டான் மச்சான். கேட்டுவிட்டாள் மச்சினிச்சி. மச்சானே, சும்மா பாடிவிட்டுப் போகிறவனுகத் தெரியவில்லை. மாலையில் அவள் வீடு திரும்பும்போது, பின்னுலேயே போவதற்குத் துடிப்பவன் போலக் காணப்படுகிருன். அவளுக்குப் பயம் வந்துவிடுகிறது! "வீட்டில் அப்பா இருப்பாரே; தெருவில் ஜனங்கள் நின்றுகொண்டிருப்பார்களே; அப்பொழுது வராமல் இரவில் வரமாட்டாரா மச்சான்? வரவைப்போம்" என்று எண்ணிப் பாடுகிருள்:

"நிலவும் எழும்பட்டும்
நிக்கசனம் போகட்டும்
அப்பாவும் உறங்கட்டும்
அப்பவந்தால் சம்மதந்தான்"

—புரிந்துகொண்டான் மச்சான். உற்சாகத்தில் ஆடியபடி ஓடிக்கொண்டே இருக்கிருன். அந்த ஒட்டத்தில் உடைந்து கிடந்த ஒரு வரப்பை மண்வெட்டியால் சரிசெய்துவிட்டுப் போகிருன். நின்றுகொண்டிருக்கும் காதலியை, தலையில் தட்டி 'வேலையைப் பாரடி' என்கிருள் தோழி. உற்சாகமாகக் களையெடுக்கத் துவங்குகிருள் காதலி. அருகிலேயே குனிந்து கொண்டிருந்த தலைவியிடம் "என்னடி உன் மச்சான் இப்படி இருக்கிருர்!" என்று கேட்கிருள் தோழி,

"நாவற் பழத்திலேயும்
நல்காயாம் பூவிலேயும்
காகஇறகுலேயும்-நல்ல
கருங்கறுப்பு எங்கமச்சான்,

-என்று அந்தக் கருப்பிலேயே பெருமைப்பட்டுச் சொல்லிவைக்கிருள் காதலி. சிரிப்புப் பெருகுகிறது. களையெடுப்பு வேகமாக நடக்கிறது. இப்படி ஏழை எளியோர்களின் நல்ல இதயம் வழங்குகிற எளிய பாடல்கள் சிறந்த சாதனங்களாக அவர்களுக்குப் பயன்பட்டு உற்சாகத்தை வளர்த்து உற்பத்தியைப் பெருக்குகின்றன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகவே இதே கதைதான் நடந்துகொண்டிருக்கிறது. உலகத்திலேயே தமிழ்நாடும், அதையொட்டிய ஈழநாடும்தான் இந்தச் செல்வத்தை அதிகமாகப் பெற்றிருக்கின்றன.

வாழ்க கிராமியக் கவிஞர்கள்!

[★19-3-56ம் தேதி பகல் 12 மணிக்கு மதுரை 2 வானெலி நிலையத்திலிருந்து ஆசிரியர் கண்ணதாசன் பேசிய பேச்சு.]

★ ★ ★

சென்னை அரசாங்கத்து மின்சாரத் துறையில் ஜூனியர் எஞ்ஜினீயராக அலுவல் பார்க்கும் வாலாஜாபாத் இந்துமத பாடசாலையின் பழைய மாணவர் திரு. சீனிவாசன், பி. எஸ். சி., பி. ஈ., அவர்களும், திரு. சு. வையாபுரி, பி. ஈ., அவர்களும் உதவி எஞ்ஜினீயர்களாக உயர்த்தப் பெற்றமையைப் பாராட்டுதற்கும், மேற்படி மின்சாரத் துறையில் டிவிஷனல் எஞ்ஜினீயராக உள்ள திரு. ஏ. வி. சிவஞானம் பி. ஈ., அவர்கள் மேனுடுகளுக்குச் சேன்று வந்தமையைப் பாராட்டுதற்கும் இந்துமத பாடசாலையில் 11-3-56 ல் ஒரு பாராட்டு வாழ்த்து விருந்து நடைபெற்றது. உயர்திரு. எஸ். ஜி. அரங்கராமானுஜம் பி. ஏ., பி. எல்., பார்-அட்-லா அவர்கள் தலைமை தாங்கினார்கள். சென்னை மின்சாரத் துறையின் தலைமை எஞ்ஜினீயர் திரு. வி. பி. அப்பாதுரை அவர்களும் வேறு பல முதன்மையானவர்களும் விழாவிற் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள்.

பாடசாலைச் செயலாளர் திரு. வா. தி. மாசிலாமணியார் அவர்கள் யாவருக்கும் நன்றி கூற விழா இனிது நிறைவேறியது.

★ ★ ★

## கழகச் செய்திகள்

★ 25-3-56-ம் தேதி மாலை திருமங்கலம் தி. மு. கழக சார்பில் துணைப் பொதுச்செயலாளர் என். வி. நடராசன், எம். ஏ. இரசாக் ஆகியோர் சொற்பொழிவாற்றுவார்கள்.

★ 25-3-56 ம் தேதி மாலை குன்றத்தூர் தி. மு. க. சார்பில் கலைஞர் மு. கருணாநிதி, வழக்கறிஞர் கோகுல கிருஷ்ணன் ஆகியோர் பேசுவர். அன்று காலை 8 மணியளவில் குன்றத்தூர் தி. மு. க. உறுப்பினர் தோழர் எம். பங்காருக்கும் தோழியர் சரசுவதிக்கும் தோழர் எஸ். எஸ். தென்னரசு தலைமையில் வாழ்க்கை ஒப்பந்தம் நடைபெறும். தோழர் ரசித் மணமக்களை வாழ்த்திப் பேசுவார்.

★ 'கிளர்ச்சி' ஆசிரியர் தோழர் இரா. சு. தங்கப்பழம் அவர்கள் மார்ச் 23, 24, 25 ஆகிய தேதிகளில் முறையே 'கோலார் தங்கவயல், பெங்களூர், மைசூர் ஆகிய ஊர்களில் தி. மு. கழக சார்பில் சொற்பொழிவாற்றுவார்.

★ இராமனுதபுரம் மாவட்டம் திருப்புத்தூர் கருணாநிதி படிப்பக வளர்ச்சிக்காக 10-4-56 ம் நாள் இரவு 10 மணிக்கு திரு. எஸ். எஸ். ராஜேந்திரன் குழுவினர் நடிக்கும் 'மணிமகுடம்' நாடகம் நடைபெறும். இடம்: திருப்புத்தூர் சிவகங்கை ரோடு திடலில் உள்ள அழகிரி அரங்கு.

★ கீழப்பூங்குடி தி. மு. கழகத் தோழர் பி. ஆர். கணேசனுக்கும் தோழியர் காளியம்மைக்கும் 26-3-56 தேதி பகல் 12 மணிக்கு காலுகோட்டையில் வாழ்க்கை ஒப்பந்தம் நடைபெறும்.

★ 20-4-56 ம் தேதி இரவு 10 மணிக்கு திருக்கோட்டியூர் அண்ணு நாடக மன்றத்தின் சார்பில் 'நச்சுக் கோப்பை' நாடகம் நடத்தப்படும்.

### திருமணம்

26-3-56 திங்கட்கிழமை காலை 9 மணியளவில்-பெரியார் நகர மண்டபத்தில் தோழர் எஸ். அப்பாவு அவர்களுக்கும் கரந்தை திரு. எல். சாமிநாதன் அவர்கள் குமாரத்தி தோழியர் தனபாக்கியத்துக்கும் அறிஞர் அண்ணு அவர்கள் தலைமையில் திருமணம் நடைபெறும். சொல்வலர் ஈ. வி. கே. சம்பத் அவர்கள் வாழ்த்துரை வழங்குவார்.

Bleed through.

# வெண்பாப் போட்டி

## 25. கால்வாசி காணுது காண்

வெண்பாப் போட்டி 25ன் பரிசு பெற்ற வெண்பாவையும் பிரசுரத்திற்குத் தகுதியுள்ள வெண்பாக்கள் சிலவற்றையும் இந்த இதழில் வெளியிட்டுள்ளோம். மீதமுள்ளவை அடுத்த இதழில் வெளியாகும்.

★ செந்தமிழுக் கிந்தியதும் சீர்திருச்சிக்(கு) ஆவடியும்
முந்தியக்கத் தின்முன் "அருள்நெறி"யும்-முந்துகுறள்
நூல்முன் மனுநூலோ டண்ணாமுன் குத்தூசி
கால்வாசி காணுது காண்.

—பாவநாசம்-பொன்னிவளவன், பள்ளி அக்ரகாரம்.

★

வாட்டு நிலையில் வறுமைநோய் மேலதிகம்
சட்டவரி போடல் இயல்பாகா(து)-ஆட்சியினர்
கோல்சாயும் நாட்டுக் குடிமக்கள் ஆதரவு
கால்வாசி காணுது காண்.

—க. வீ. வரதன், சென்னை-23.

★

அத்தான் எனைப்பிரிந்தாய் ! அன்றுமுதல் நாள்தோறும்
செத்துப் பிழைக்கின்றேன் ! தேர்ந்துவா-முத்தம்தா !
நாள்பல நீட்டிக்கா என்னுடலோ நாட்சென்றால்
கால்வாசி காணுது காண்.

—பி. தேவஅரசு, ராம்ஜிநகர்.

★

ஐந்தாண்டுத் திட்டங்கள் அத்தனையும் ஆர்க்கென்றால்,
வந்திங்கே வாழும் வடவர்க்கே-பைந்தமிழா !
நல்திக்கும் நோக்கினுல் நன்கறிவாய் நம்பங்கு
கால்வாசி காணுது காண்.

—ச. மருதமுத்து, உடுமலை.

★

ஆழக் திரைகடலே உன்னை அளந்தாலும்
வாழுந் தமிழளக்க வல்லாரோ;-பாழாகக்
கோல்கொண்ட மாற்றார் கொடுவந்த இந்திஉன்
கால்வாசி காணுது காண்.

—புரட்சிவேலன், கோத்தகிரி.

★

தந்தைதாய் எங்களுக்குத் தாள்நோகத் தானிரந்தார்
மொந்தைக்கூழ் கண்டவுடன் மொய்த்துவிட்டோம்-எந்தாயே
பால்போலப் பங்கிடினும் பாழ்வயிற்றுத் தன்பசிக்குக்
கால்வாசி காணுது காண்.

—வெ. இறையழகன், பழைய ஆயக்குடி.

★

வானுல் கடலால் வந்தடித்த வன்புயலால்
தேனர் தமிழுடையார் சேதமுற்றார்-கோணுத
கோல்கொள்ளா நேருகொடை கொண்ட துயர்நீக்கக்
கால்வாசி காணுது காண்

—ஆசிரியர் சவ்வாது, கயற்கண்ணிபுரம்.

★

பால்போலும் இன்சொல் பவளம்போல் செங்கனிவாய்
ஆல்போல் தழைத்திடுநல் ஆறறிவு-மேலோங்கு
வேல்விழியாள் கூந்தற்கு வெவ்விருளும் கார்முகிலும்
கால்வாசி காணுது காண்-

—அ. கிருஷ்ணன், சரவணபட்டி.

★

பன்மீன் நடுவண் மதியம்போல் நின்றொளிரும்
நன்னெறிசேர் வள்ளுவன் வாய்மொழிமுன்-புன்னெறிசேர்
நால்சாதிக் கொள்கை வளர்த்த மனுநீதி
கால்வாசி காணுது காண்.

—மணிவண்ணன், குப்பிடிசாத்தம்.

★

செந்தமிழ்[illegible]ரும் சேர்ந்து வருடமெல்லாம்
வெந்தணலில் தான்போய் உழைத்திடினும்-பைந்தமிழர்
கோலடக்கி வாழும் கவர்னரின் சம்பளத்தில்
கால்வாசி காணுது காண்.

—கே பி, சோதி, சாளச்சந்தை.

★

வீரப்பால் ஊட்டிய வீரத்தாய் தன்மகனை
போரக் களத்தில் கொடுத்திட்டு-வீரத்தை
நூல்மூலம் காட்டிய, கற்பணிக்கு, மற்றவைகள்
கால்வாசி காணுது காண்.

—ஞா. தேவசிகாமணி, தரங்கை.

★

இல்லா ளிடத்தினிலும், இந்தப் பெருமுலகின்
எல்லாப் பொருளினிலும் எய்துமின்பம்-நல்லதனிப்
பால்போலும் தூய்மைப் பசுந்தமிழின் இன்பத்தில்
கால்வாசி காணுது காண்.

—கோ. கலியபெருமாள், சிதம்பரம்.

★

கொவ்வை இதழெனலுங் கொல்பார்வை வேலெனலும்
ஒவ்வா தெனவுரையேன் ஒண்டொடியே-அவ்விதத்தில்
பால்நிறமும் ஓரளவு பாய்ந்துளகார், நின்குழற்குக்
கால்வாசி காணுது காண்.

—அடைக்கலக் குணளன், கோவிலூர்.

★

சுவையுடனே முப்பொருளும் சொல்லுகின்ற நூல்கள்
தொகைமிகவே தோன்றிடினும் தோழீ-அவையெல்லாம்
கால்குறைந்த ஈரடியின் கன்னித்தமிழ் மறைக்குக்
கால்வாசி காணுது காண்.

வை. சிவஞானம், வைத்திநாதபுரம்.

★

வீரூார் புறங்காட்டார் வேல்வரினும் கண்ணிமையார்
தாழ லரிதன்றே தண்டமிழர்-தாழ்ந்ததுமுக்
கால்வாசி ஆரியத்தால்; கண்டெழுநின் இவ்வேடும்
கால்வாசி காணுது காண்

—அ. இரத்தினசாமி, கோவிலூர்.

★

அல்லும் பகலும் அனலாம் பசியுடனே
இல்லம் பலசென் றிரந்திட்டான்-சில்சோறு
வேல்விழியாள் தானளித்தாள்; வெம்பும் அவன்பசிக்குக்
கால்வாசி காணுது காண்.

—கி. இராமசாமி, குண்டவெளி.

★

மண்தேய்த்த மாப்புகழான் மன்னுதமிழ்ச் சொற்செல்வன்
அண்ணாவின் ஆற்றல் எவர்ஒப்பார்-தண்டமிழர்
பால்சுரண்டி வாழும் வடவர் திறலாண்மை
கால்வாசி காணுது காண்,

—ந. பத்மநாபன், பென்னகர்.

★

நாட்டுக் குதவாத நான்மறையோ டாரியர்செய்
பாட்டுப் பழங்கதையின் பண்புகளை-கூட்டியெழில்
சேல்வழியே வள்ளுவனார் செய்குறளோ டொப்பிட்டால்
கால்வாசி காணுது காண்.

—வி ப. கோவிந்தசாமி, சென்னை-12.

★

தொன்மை பொலிந்து பொருட்சுவை சொற்சுவைதோய்
அன்னை, மொழிமுன்னர் ஆரியந்தான்-நன் னுதலே !
பால்ஒளி வையோன்முன் மின்மினிபோல் மாணுதாம்
கால்வாசி காணுது காண்.

—திருவேங்கடம், பாரியமங்கலம்.

★

மாதங்கள் பத்தாய் மணிவயிற்றி லேசுமந்து
ஏதங்கள் நீக்கி யெனைவளர்த்த-மாதவளின்
சால்புள்ள அன்பிற்கு மாலாகும் பெண்காதல்
கால்வாசி காணுது காண்.

—சி, சிவராமலிங்கம், சென்னை-1.

★

நூலனைத்தும் வள்ளுவர்செய் நூலாமோ? சொல்லனைத்து
ஞாலத்தில் எங்களண்ணு சொல்லாமோ?-வாலறிஞர்
நூலினையும் சொல்லினையும் எண்ணிடவே மற்றெல்லாம்
கால்வாசி காணுது காண்.

—மு. சு. மணி, குரு[illegible].

★

சர்க்கார் சிப்பந்தி சகலருக்கும் கீழிருப்பர்
வர்க்கபேதத் தால்வாய் புதைத்தபடி-நிற்கின்ற
சிலஞ்சேர் சேவகர்கள் சம்பளமோ மாதத்தில்
கால்வாசி காணுது காண்.

கோ. கந்தசாமி, சென்னை-4.

★ பரிசுபெற்ற வெண்பா—பரிசு, ஓராண்டு 'தென்றல்' சந்தா.

ஆசிரியர், அச்சிடுபவர், வெளியிடுபவர் கண்ணதாசன், ஏ. எல். எஸ். அச்சகம், 2-127, மவுண்ட் ரோடு, சென்னை - 6.

